



கவிஞர்

கோவை. இளஞ்சேரன் எழுதிய

# நகைச்சுவை நாடகங்கள்



# மணியான பேச்சு

(சிலப்பதிகாரத் திறனாய்வு நூல்)

*கவிமாமன்னன் பாரதி, இளங்கோ வடிகளின் உள்ளத்தைத் தொட்டுணர்ந்து பாடுந் திறன் சுவைத்து மகிழ்தற்குரியது.*

*இளங்கோவடிகள் சிலம்பில் கண்ணகியைக் காட்டும் திறம் ஒரு தனித் திறம். புகாரில் மழலையாய் வளர்க்கிறார்; மதுரையில் தாயாய்ப் போற்றுகிறார்; வஞ்சியில் தெய்வமாய்ப் பணிகிறார். இவ்வமைப்பு கண்டு வியத்தற்குரியது.*

*அம்மகிழ்ச்சிக்கும், இவ்வியப்பிற்கும் ஏற்ற தலைப்பமைத்துக் கவிஞர் கோவை. இளஞ்சேரனார் ஆற்றிய சொற்பொழிவின் விரிவான நூல்* **மணியான பேச்சு.**

மேடையுலகின் புதுமைப் பொலிவோடு,
நூலுலகில் நறுமை மெருகோடு
**மலர்ந்துள்ள நூல்.**

விலை மறுபுற அட்டையில்......

# நகைச்சுவை நாடகங்கள்

கவிஞர்

கோவை இளஞ்சேரன்



கலைக்கதிர்
வெளியீடு
நாகப்பட்டினம்

# பதிப்புரை

வணக்கம்

இந்நூல் கலைக்குடியின் மூன்றாவது வெளியீடு. எம் முதல் வெளியீடாகக் கவிதை நூல் அரும்பியது. அடுத்து வாழ்வியல் நூல் முகிழ்த்தது. இது கலையியல் நூலாக மலர்கின்றது. இவை மூன்றும் கவிஞர் கோவை இளஞ்சேரனாரது படைப்புக்கள்.

இந்நூல் மூன்று நகைச்சுவை நாடகங்களைக் கொண்டது. மூன்றும் மாணவர்களால் நடிக்கப்பட்டவை; பிறராலும் நடிக்கத் தக்கவை; அறிவினுக்கு விறுவிறுப்பேற்றுபவை. படித்துச் சுவைப்பதற்கும் தக்க வகையில் பதிப்பிக்கப்படுகின்றன.

நடிப்பை மேற்கொள்பவர் கதையுற்றாரின் இயல்புகளை உள்ளத்தில் ஊன்ற வேண்டும். நடிகரை மேடைக்கு அனுப்புவோர் கதைச் சூழலுக்கேற்ற ஒப்பனைக் குறிகளை நினைவில் கொள்ள வேண்டும். இவற்றிற்கென ‘ எங்கள்

இயல்பும், விரும்பும் ஒப்பனையும்' என்னும் பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

இந்நூல் வெளிவர முழுப் பொறுப்பையும் ஏற்று, விற்பனை உரிமையையும் பெற்றுள்ள 'மாரியப்பா ஏசன்சி' உரிமையாளர் திரு நா. ஆ. நாராயணசாமி அவர்களுக்கும், அச் சேற்றும் பொறுப்பை ஆர்வமுடன் ஏற்று உதவிய சென்னை அன்பர் திரு இரா. க. முருகன் அவர்களுக்கும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

படித்தும் நடித்தும் நகைத்தும் மகிழ்ந்து, பயன் கொள்ள இருக்கும் தமிழரது நல்லுள்ளங்களுக்கு வணக்கமும், நன்றியும் கூறி அமைகின்றேன்.

வணக்கம்.

இங்ஙனம்,
சானகி இளஞ்சேரன்

# முன்னுரை

நல்ல கருத்துக்களை உள்ளத்தே பதி வாக்க நகைச்சுவை தெளிவான கருவி. நாட கத்திற்கு உப்புப் போன்றது நகைச்சுவை. இவ்வுண்மை தெளிய உருவாக்கப்பட்டவை இந்நாடகங்கள்.

'நடிக்க வேண்டும்; நாடகம் எழுதி வழங்குங்கள்' — என்று 'கலைதெறி மாணவர் ஆண்டுதோறும் வேண்டுவர். தேர்ந்தெடுக் கப்பட்ட மாணவரை அமர வைத்து உரை யாடல்கள் கூறப்படும். அவரவர் தத்தமக் குரியவற்றை எழுதிக் கொள்வர். நடிப்பர்; உவப்பர்; மகிழ்வூட்டுவர்.

இம்முறையால் நாடகத்தின் உரையாடல் ஒரு தொகுப்பாகக் கிட்ட இயலாது போயிற்று. நண்பர், புலவர் இரா. இராசு அவர்கள் முயன்று யாவற்றையும் தொகுத்து உதவினார் கள். நாகைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர் வகுப்பு மாணவர் திரு இர. இராமதாசு அவர் கள் படியெடுத்துதவினார்கள். இருவர்க்கும் எனதன்பார்ந்த நன்றி கூறி மகிழ்கின்றேன்.

"எட்டும் கூடின" என்பதன் கதை என் கற்பனை. "மறதி மன்னன்" "ரிமெம்பர் சீசர்" என்னும் ஆங்கில நாடகத்தின் தழுவல். "அரசை ஆட்டிய அடிமை" தால்சு-தாய் கதையின் தழுவல்.

பண்படுத்தும் கருத்து மூன்றிலும் உயிர் நாடி.

படிப்போர் பண்பறிவர். நடிப்போர் நயம் பெறுவர். பார்ப்போர் பாங்குணர்வர். யாவரும் உயிருக்கும் உடலுக்கும் ஊட்டம் பெறுவர். இவை உண்மை என்னும் நம்பிக்கையில் பூரிக்கின்றேன்.

வணக்கம். அன்பன்,

கோவை. இளஞ்சேரன்.

மாணவர்க்கு அன்புப் பரிசு

பொடிச்சிரிப்பும் வெடிச்சிரிப்பும் இரண்டும்: மூன்றும்
நொடிச்சிரிப்பும் மாணவர்கள் எனக்கென் றேதின்

துடிச்சிரிப்பாய்ச் சிரிப்பீர்கள் ; அதினும் அன்றோர்
துய்தமிழின் சிரிப்புணர்முப் புலவர் என்னில்

நெடிச்சிரிப்பாய் எனைச்சிரிப்பீர் ; எனினும் அன்றோர்
கொடிச்சிரிப்பாம் மலர்ச்சிரிப்பாய்ச் சிரிப்பா
ராம்' இப்

படிச்சிரிப்பார் சண்முகவ டிவேல்கோ விந்தற்
கிச் சிரிப்பு நூலென்றேன் ; சிரிப்பில் கொள்வர்.

அன்பன்,

[signature]

## உள்ளுறை

# 1. எட்டும் கூடின

'கோள்கள் எட்டும் ஒன்றிக் கூடினால் உலகம் அழியும்' எனச் சோதிடர் கதை கட்டி விட்டனர். எட்டும் கூடின; உலகமும் உள்ளது. சோதிடம் 'ஒரு கலை' என்பர். நடைமுறையில் அது பொய்யெனும் வலையே. இதனை நகைச்சுவையுடன் மேடையில் காட்சியாக்கும் நாடகம்.

கதைக் கோளத்தில்

எட்டுக் கோள்கள் :

கதிரவன் — குமரன் — செவ்வாயிக்கு அண்ணன் மகன்.

நிறைமதி — குமரி — வியாழனார் மகள்.

செவ்வாயி — தாய் — வியாழனார் மனைவி.

புதன் — சிறுவன் — வியாழனார் மகன்

வியாழனார் — தந்தை — குடும்பத் தலைவர்.

வெள்ளியம்பலம் — இளைஞன் — கதிரவனது நண்பன்.

சனி — சோதிடன் — வியாழனாருக்கு அக்காள் மகன்.

அரவிணையார் — ஐயர் — வியாழனாரது மதிப்பிற்குரியார்.

எங்கள் இயல்பும்

விரும்பும் ஒப்பனையும் :

*வியாழனார் :* நான் ஐம்பது அகவை நிறைந்தவன் ; சாத்திரம், சடங்குகளில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவன். முழுக் குடுமியை முடிந்து, அதை உள்ளிட்டு வெள்ளைத் தலைப்பாகையைக் கவித்துக் கொள்வேன். நெற்றியில் முப்பட்டைத் திருநீறணிந்து, நடுவில் பிறைவடிவச் சந்தனப் பொட்டிடுவேன். காதில் வெள்ளைக்கல் கடுக்கன் அணிந்து, மூக்கில் கண்ணாடி அமைப்பேன். முழு மீசையை முறுக்கிக் கொள்வேன். வெள்ளை முழுக்கைச் சட்டையின்மேல் முழு நீலக் கருப்புக் கோட்டை அணிவேன். அதன் பையில் வெள்ளிச் சரடோடு பை மணிப் பொறியைக் கொள்வேன், அரையில் சிவப்புக் கரையிட்ட வெள்ளை ஆடையை மூலக் கச்சாகக் கட்டுவேன். வெளியில் புறப்படும்போது கழுத்திலிருந்து இருபுறமும் மார்பு வழி விசிறி மடியைத் தாழவிட்டுக் காலில் மிதியடி சேர்த்துக் கையில் பிரம்பைக் கொள்வேன்.

*செவ்வாயி :* நாற்பத்தைந்து அகவை நிறைந்த நான் காலத்திற்கேற்பப் பழகிக் கொள்வேன். கூந்தலை அள்ளிச் செருகி, ஒரு பக்கம் கொண்டையிட்டுச் செவ்வந்திப் பூவைச் சூடுவேன். முகத்தில் மஞ்சள் பூசி நீராடி, அரக்குக் குங்குமப் பொட்டிடுவேன். பழங்காலத் தோடும், மூக்குத்தியும் அணிவேன்.

---

* நடிகர்களுக்கு ஒப்பனை செய்வதன் குறிப்பாக இப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது. மேடைக்கு வரும் வரிசையில் அறிமுகம் செய்து கொள்வதாக அமைக்கப்பட்டுள்ளது

கட்டம் போட்ட சிவப்பு நிறப் புடவையைப் பின்புறக் கொசுவம் விட்டு உடுப்பேன். முழங்கை வரை இரவிக்கை அணிவேன். உட்கழுத்து அட்டிகை, திருமங்கலியம் கோத்த சரடு எப்போதும் கழுத்தில் இருக்கச் செய்வேன். கைகளில் பட்டைப் பொன் காப்பணிவேன். கால் விரல்களில் இரட்டை மிஞ்சிகள் அணிந்து அவை ஓசையிட நடப்பேன்.

*அரவிணையார்:* எனக்கு ஐம்பத்திரண்டு அகவையாகின்றது. வடமொழி மறை, மந்திரங்களில் தேர்ந்தவன். சடங்காற்றுதல் என் குலத் தொழில். உச்சியில் குடுமி வைத்து முடிந்து விட்டுக் கொள்வேன், நெற்றில் முப்பட்டைத் திருநீறணிந்து அதன்மேல் கைக் கட்டை விரலால் சந்தனத்தைக் கொண்டு திருநாமம் போல் இட்டுக் கொள்வேன். மார்பில் முப்புரி நூல் அணிவேன். மார்பும் கைகளும் நிறையச் சந்தனம் பூசுவேன். கழுத்தில் ஒரு அக்கமணி அணிவேன். சேலம் குண்டஞ்சி ஆடையை ஐந்து கச்சமாக உடுப்பேன். ஆறு முழமுள்ள மேலாடையை இடுப்பைச் சுற்றி முடிச்சிட்டுக் கொள்வேன். கையில் எப்போதும் தருப்பைப் புல்லைக் கொள்வேன். மரத்தாலாகிய காலடிக் குறடு அணிந்து நடப்பேன்.

*நிறைமதி:* பதினெட்டு அகவை யடைந்த நான் இரட்டைப் பின்னலாகக் கூந்தலைத் தொங்க விடுவேன். தற்கால நாகரீகப் பூச்சுக்கள், ஒப்பனைகள் எனக்கு விருப்பமானவை. காதில் புதுமைத் தோடணிந்து, முத்துக்குழை அணிவேன். இளம் பச்சை நிறப் பட்டுப் பாவாடையும், அதே நிற மேற் சட்டையும் அணிந்து, சிவப்பு நிற மேலாடை உடுப்பேன். நீண்டு தொங்கும் பொன் சங்கிலி

அணிவேன். கல்லிழைத்த கழுத்தட்டிகை அணி வேன். வலக் கையில் மணிப் பொறியும், இடக் கையில் பொன் வளையல்களும் அணிவேன். புது மைப் போக்கு எனக்குப் பிடித்தமானவை.

புதன் : பதின்மூன்று அகவை நிறைந்த நான் குறும்புக் காரன்தான். நாகரீக முடியைச் சீவி அழகு செய்து கொள்வேன். புளியங் கொட்டை நிற அரைக்காற் சட்டைக்குள் வெள்ளை நிற முழுக்கை மேற் சட் டையை விட்டு, கழுத்தில் கழுத்துக் கச்சு அணி வேன். கால் உறை யணிந்து மூடு மிதியடி அணி வேன்.

கதிரவன்: இருபத்து நான்கு அகவையுடைய நான் பகுத்தறிவுப் பாசறையினன். சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களுக்கு மதிப்பளித்துக் கடைப்பிடிப்பவன். புதுமையான தலைமுடி ஒப்பனை செய்து கொள்வேன். நாகரீகப் பூச்சிடுவேன். அரும்பு மீசை அமைத்து அதைத் தடவிக் கொள்வதில் அவாக் கொள்வேன். கருநிற முழுக்காற் சட்டையும், அதன்மேல் புதுமை வகை மேற் சட்டையும் உடுத்து மேலே எப்போதும் கருநிறக் கம்பளிச் சிறு துண்டைக் கழுத்தைச் சுற்றி முன்புறமாகத் தாழ விடுவேன். காலில் செருப்பணிவேன். கையில் மணிப்பொறி அணி வேன்.

வெள்ளியம்பலம் : இருபத்தைந்து அகவையுடைய நான் சமூகச் சீர்திருத்தத் தொண்டன். இடுப்பு முடக் கத்தோடு பிறந்தவன் நான். அதனால் நடக்கும் போது நிமிர முடியாமல் "ட" போல் முடங்கியே நடப்பேன். முன்புறம் தொங்காத நாகரீக முடி வெட்டிக் கொள்வேன். வெட்டி விடப்பட்ட அரை மீசை எனக்கு விருப்பமானது. முழுக் காற்சட்டை

யும், அதனுள் விட்டணியும் முழுக்கைச் சட்டையுமே உடுப்பேன். கருமை, பசுமை நிற உடைகளே எனக்கு விருப்பமானவை. கையில் அரையளவுத் துண்டைக் கொண்டிருப்பேன். மணிப் பொறி அணிவேன்.

சனி : இருபத்தைந்து அகவை நிறைந்த நான் சோதிடக் கலைஞன். முழுக் குடுமியாக வளர்த்துக் கழுத்து வரை வெட்டி விட்டுக் கொண்டவன். நெற்றி நிறையத் திருநீறணிந்து பெரிதாய்க் குங்குமப் பொட்டிட்டு, அதன்கீழ் சந்தனப் பிறை இட்டுக் கொள்வேன். காதில் சிவப்புக் கல் கடுக்கன் அணிவேன். முறுக்கிவிடும் முழு மீசை எனக்கு விருப்பமானது. பெரிய வெள்ளித் தாயத்தைக் கருப்புப் பட்டுக் கயிற்றில் சேர்த்து மார்பில் படுமாறு கழுத்தில் அணிவேன். தோளிலில் ஒரு தாயத்தைச் சிவப்புப் பட்டுக் கயிற்றில் சேர்த்துக் கட்டிக் கொள்வேன். வெண்பட்டை முழங்கால் வரை மூலக் கச்சமாகக் கட்டிக் கொள்வேன். அதன் மேல் இடுப்பில் பச்சை நிறப் பட்டு ஒன்றைக் குறுக்காக டித்துக் கட்டுவேன். மார்பிலும், கைகளிலும் மேல் கீழாகச் சந்தனத்தைப் பட்டையாப் பூசிக் கொள்வேன். மேலே எதையும் உடுத்தாமல் திறந்த மார்புடன் விளங்குவேன். எப்பொழுதும் நான் எடுத்துச் செல்லும் எனது உரிமைப் பொருள்கள் பின் வருவன : ஒரு இரும்புப் பெட்டி, படுக்கைச் சுருள், அரிக்கன் விளக்கு, ஒரு பை, விசிறி, ஒரு குடை, நெடுநாளாய் வளர்க்கும் ஆந்தை.

# எட்டும் கூடின

## முதற் காட்சி

இடம் : வியாழனூர் இல்லம்.

நேரம் : மாலை.

கதையுற்றோர் : வியாழனூர், செவ்வாயி, அரவிணை யார், நிறைமதி, கதிரவன், புதன்.

*[திரை விலகுகிறது; ஒரு நீளப் பலகையில் மூன்று அரிசி மூட்டைகள் உள்ளன. ஒரு மேசை, இரண்டு நாற்காலிகள் கிடக்கின்றன. ஓர் அரிசி மூட்டையின் பக்கலில் நின்ற நிறைமதி அங்கும் இங்கும் பார்க்கிறாள். எவரோ வரும் ஓசை கேட்டு விரைவாக உள்ளே செல்கிறாள். வியாழனூர் தன் மனைவியை அழைத்தவாறே வெளிப்புறத்திலிருந்து வருகிறார்.]*

*வியாழனூர் :* யார் இங்கே? உன்னைத்தான், செவ்வாயீ! ஏ செவ்வாயி!

*செவ்வாயி :* ஏன்; இங்கேதான் இருக்கிறேன்.

*வியா :* இங்கே வா! என்ன செய்கிறாய் ?

குறிப்பு : மேடையில் உரையாடும்போது அவரவர்க்கேற்ப வீட்டு வழக்கில் உரையாடலாம்.

செவ் : வீட்டிற்குள்ளே புகும்போதே ஏன் வெண்கலக் கடையில் யானை புகுந்தாற்போலக் 'கட புடா' என்று வருகிறீர்கள் ?

வியா : கேட்டாயோ, உன் அண்ணன் மகன் வேலையை?

செவ் : என்ன வேலை ? மந்திரி வேலையா ?

வியா : ஆமாம் ; மந்தி வேலை செய்திருக்கிருன் உன் அண்ணன் மகன்.

செவ் : இங்கே பாருங்கள் ; வீணாக அண்ணன் மகன் —அண்ணன் மகன் என்று சொல்லாதீர்கள். உங்கள் ' மருமகன் ' என்று சொல்லுங்கள்.

வியா : ஓகோ, அது வேறு சொல்ல வேண்டுமோ ? எனக்கு ஊரில் இருக்கிற மதிப்பும் இவனை மருமகனுக்கினுல் கெடவேண்டும் அல்லவா ?

செவ் : அப்படியா ? இருக்கட்டும், உங்கள் மருமகன் என்னவோ வேலை செய்தான் என்று சொன்னீர்களே !

வியா ; அப்படிக் கேள், உன் அண்ணன் மகன் வேலையை.

செவ் : அப்படிச் சொல்லுங்கள், உங்கள் மருமகன் வேலையை.

வியா : இங்கே பார் ! அடிக்கடி உங்கள் மருமகன்— உங்கள் மருமகன் என்று சொன்னுல் எனக்குப் பொல்லாத சினம் வரும்.

செவ் : என்னங்க, நீங்கள் மட்டும் அடிக்கடி உன் அண்ணன் மகன் — உன் அண்ணன் மகன் என்று சொன்னுல், எனக்கு நல்ல சினம் வராதா ? அது கிடக்கிறது, சொல்லுங்கள் உங்கள் ...........அவன் வேலையை ?

*வியா :* கேள்! இந்த முண்டத்தை நகராட்சியில் உறுப்பினராய்க் கொண்டுபோய் உட்கார வைக்க வேண்டும் என்று அடித்துக் கொண்டாயே! உன் பேச்சைக் கேட்டு நானும் அவனைத் தேர்தலிலே நிற்க வைத்து, நகராட்சியில் உட்கார வைத்தேனே; எதையோ குளிப்பாட்டி எங்கேயோ வைத்தால், அது எதையோ கிளப்பிக்கொண்டு எதையோ தின்னப் போகுமாம். அது போல் இருக்கிறது இவன் வேலை. வெளியே தலைகாட்ட முடியவில்லை.

*செவ் :* தலையைக் காட்டாமல்தான் தலையில் தலைப் பாகை வைத்திருக்கிறீர்களே!

*வியா ;* என்னடி! கிண்டலாகப் பேசுகிறாய். ஆமாம். இந்தக் கிண்டல் பேச்சு உங்கள் குடும்பச் சொத்தா? இல்லை, சாதிப் புத்தியா?

*செவ் :* இங்கே பாருங்கள்! குடும்பம், சாதி கீதி என்று கூறுகெட்டுப் பேசாதீர்கள். உங்கள் மருமகன் எதில் குறைவாக நடந்து விட்டான்? ஊரிலே கதிரவன் என்றால் எவ்வளவு மதிப்பு? எப்படிக் கொண்டாடுகிறார்கள்? உங்களுக்கு அந்த மதிப்பு உண்டா?

*வியா :* ஓகோ! கொண்டாடுகிறார்களா? கேள் உன் அண்ணன் மகன் மதிப்பை?

(அரவிணையார் வருகிறார்)

*அரவிணையார் :* * வியாழம் பிள்ளைவாள் இருக்கிறாரோ? ஓ இதோ இருக்கிறீர்களே!

---

* பார்ப்பன உச்சரிப்பில் உரையாட வேண்டும்.

வியா ; அடடா! வாருங்கள் ஐயரே! எங்கே இப்படி? என்ன செய்தி? (மனைவியைப் பார்த்து) இந்தா அந்த நாற்காலியை எடுத்துப் போடு!

அர: இல்லை ...... இருக்கட்டும்! ஒரு சிறிய செய்தி.

வியா: என்ன; என்ன சொல்லுங்கள்; என்ன செய்தி?

அர: உங்கள் மருமகன் இருக்கின்றானே............

செவ்: அப்படிச் சொல்லுங்கள் 'உங்க மருமகன்' என்று.

அர: நான் நேற்றுப் பெருமாள் கோயில் பக்கமாகக் கையைத் தூக்கித் தொழுது கொண்டே வந்தேன். உங்கள் மருமகன் இருக்கிறானே.........

வியா; நிறுத்துமையா ஐயர். என்ன அடிக்கடி மருமகன் போடுகிறீர்? செய்தியைச் சொல்லுமையா.

செவ்: போட்டால் என்ன?

வியா: இங்கே பார்.........பேசாமல் இரு; ஆமாம்.

அர: எல்லாம் கிரகக் கோளாறு. உங்களுக்குள்ளே சண்டை எதற்கு? அந்தக் கதிரவன் இருக்கிறானே, நான் பெருமாளைச் சேவித்துக் கொண்டே நடக்கும்போது எதிரே வந்தவன் என்னைப் பார்த்து வணங்கினான். குழந்தை மரியாதை செய்கிறானே என்று நினைத்து என்னப்பா செய்தி என்றேன். அதற்கு அவன் நீங்கள் என்னைப் பார்த்து வணங்கினீர்கள்; நானும் வணங்கினேன்— என்று கிண்டலாகப் பதில் கூறிவிட்டுப் போகிறான். அதை உங்கள் காதிலே போட்டு வைத்தேன். நான் வருகிறேன்.

வியா: உம்...வாருங்கள். நான் கவனித்துக் கொள்கிறேன். அவன் காலிப் பயல்.

*அர* ; அதைத்தான்.........நானும் சொல்ல வந்தேன். நான் வருகிறேன்.

*வியா* ; கேட்டாயாடி உன் அண்ணன் மகன் வேலையை? ஊரிலே என்னவோ கொண்டாடுகிறார்கள் என்றாயே! எப்படிக் கொண்டாடுகிறார்கள் என்று கேட்டாயா?

*செவ்* : கேட்டேன், கேட்டேன். ஊர் என்றால் இந்தக் ஐயரிலே தொடங்கி உங்களோடு முடிந்து விட்டதா என்ன? இவர் கிடக்கிறார். பெரிய செய்தி சொல்ல வந்துவிட்டார். காதிலே போட வந்தாராம். என்னங்க......கடுக்கன் கிடுக்கன் ஏதாவது கொடுத்தாரா காதிலே போட்டுக் கொள்ள?......மனிதன் பெருமாளைச் சேவித்தவர், ஏன் நடந்துகொண்டே சேவிக்க வேண்டும்? நின்று நன்றாய்ச் சேவிப்பது தானே! இந்த இழவு பக்தி அவன் வணங்கியதால் உடைந்து போயிற்றாம்? இவர் வணங்கிக் கொண்டே நடந்திருக்கிறார். எதிரே வந்த உங்கள் மருமகன் தன்னைத்தான் வணங்குகிறார் என்று நினைத்து அவனும் வணங்கி இருக்கிறான்.

*வியா* : அவர் செய்தது இருக்கட்டும். இவன் - உன் அண்ணன் மகன் வேண்டுமென்றேதான் கிண்டலாக வணங்கியிருப்பான். இது கிடக்கட்டும். நகராட்சிச் செய்தியை விட்டுவிட்டேனே.

*செவ்* : அ......அதைச் சொல்லுங்கள்.

*வியா* : கேள்......ஊரிலே ஒரு விளையாட்டுத் திடல் ஏற்படுத்த வேண்டும் என்று நகராட்சியிலே பேசினார்களாம். உன் பரம்பரை......அண்ணன் மகன் கருத்துச் சொல்லி இருக்கிறான் கேள். 'திடல் இல்லையே என்று கவலைப்பட வேண்டாம். இந்தப் பெரிய கோயிலை இடித்துக் குளத்திலே போட்டால்,

பெரிய திடலாக ஆகிவிடும்' என்று சொல்லியிருக்கிறான். போதுமல்லவா, உன் அண்ணன் மகன் வேலை ?

செவ் : அப்படி ஒன்றும் அவன் சொல்லியிருக்க மாட்டான்.

வியா : சொல்லியிருக்க மாட்டானா ?...தீர்மானமாகவே கொண்டு போயிருக்கிறான். இந்த நாத்திகப் பிண்டத்துக்குத்தான் நம் மகள் நிறைமதியைக் கட்ட வேண்டும் என்று நீ கொட்டம் அடிக்கிறாய்.

நிறைமதி : கட்டினால் என்ன அப்பா ?

வியா : என்னம்மா உன்னையும் தயார் பண்ணி விட்டாளா உன் தாயார் ?

செவ் : இங்கே பாருங்கள்......இவளும் அவனைத்தான் விரும்புகிறாள். எனக்கும் அதுதான் எண்ணம். அவனும் இவள்மேல் ஆசையாய் இருக்கிறான். எல்லாருக்கும் வாக்குரிமை என்கிறபடி நாங்கள் மூன்று பேரும் பெரும்பான்மை. நாங்கள் சொல்கிறபோது நீங்கள் ஒருவர்தான் ஒத்துப் போக வேண்டும்.. அப்போதுதான் குடும்ப ஆட்சி நிலைக்கும். வீணாகத் திரும்பத் திரும்ப உளறாமல் அடுத்த மாதத்திற்குள்ளே முடிச்சுப்போட வழி பாருங்கள்.

வியா : பேசாமல் இருடி...... 'முடிச்சவிழ்க்கப் போனாலும் மூன்று பேராகப் போகாதே' என்பது தெரிந்தும் முடிச்சுப் போடும் வேலைக்கா உங்கள் மூன்று பேரையும் கேட்கப் போகிறேன். இங்கே பாரு ! திட்டவட்டமாகப் பச்சை வெட்டுக் கல்லை அறுத்தாற் போலச் சொல்லிவிட்டேன். என் அக்காள் மகன் இன்னும் மூன்று நாளில் வரப்போகிறான் அவன் பெரிய மேதாவி. சோதிடம், ஆருடம், கை

ரேகை, மந்திரம் இவைகளில் எல்லாம் கெட்டிக்காரன். அவன்தான் எனக்குப் பிடித்தவன். அவனுக்குத்தான் என் பெண். இதை எவராலும் மாற்ற முடியாது.

*நிறை :* என்னப்பா இது! இரண்டாய்க் கிழிந்த நோட்டையே மாற்றிவிடுகிறார்கள். முழுமையாய் இருக்கிற உங்களையா மாற்ற முடியாது?

*செவ் :* அப்படியெல்லாம் அப்பாவை ஒன்றும் சொல்லாதே, அவராக மாறி விடுவார்.

*வியா :* அதுதான் முடியாது.

*நிறை :* சோதிடக்காரரைக் கட்டிக் கொள்வதுதான் என்றால் முடியாது.

*வியா :* பார்ப்போம்......பார்ப்போம்.

*செவ் :* பார்ப்போமே!

(புதன் வருகிறான்)

*புதன் :* கதிரவன் அவர்கள் வாழ்க! எனது அத்தான் கதிரவன் அவர்கள் வாழ்க! நகராட்சி உறுப்பினர் கதிரவன் அவர்கள் வாழ்க!

*வியா :* ஏய்! என்னடா வாழ்த்துப் பாவோடு உள்ளே வருகிறாய்? என்ன அவனுக்கு வாழ்வு வந்துவிட்டது?

*புத :* எங்கள் அப்பாவின் மருமகன் கதிரவன் அவர்கள் வாழ்க!

*செவ் :* சொல் அப்படி!

*புத :* எங்கள் அக்காளின் எதிர்காலக்........

*வியா :* ஏய்! ஏய்! செய்தியைச் சொல்லடா!

*புத :* இன்று எங்கள் பள்ளியில் நண்பகல் உணவு விழா அத்தான் தலைமையில் நடந்தது. அப்போது

அத்தான் ஒரு மூட்டை அரிசி தருவதாகச் சொல்லி யிருக்கிறார். அதனால், அத்தான் கதிரவன் அவர் கள் வாழ்க!

**வியா:** ஏனடா! இந்த வறண்ட பயலுக்கு ஒரு மூட்டை அரிசி ஏதடா?

**செவ்:** இங்கே பாருங்கள், இந்த வீட்டில் இருப்பவை யெல்லாம் அவன் சொத்துத்தான். [புதனைப் பார்த்து] தம்பி! கொடுப்பதெல்லாம் பிறவியி லேயே இருக்கிற குணம்.

**புத:** ஆமாமம்மா, நான் கூட ஒரு பாட்டுப் படித்திருக் கிறேன்.

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்."

**செவ்:** பார்த்தீர்களா, பாட்டுக்கூட இருக்கிறது!

**வியா:** ஏனடி எது பிறவிக்குணம்? கடைத் தேங் காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைப்பதா பிறவிக் குணம்? என் வீட்டு அரிசியை எடுத்து அவன், பள்ளிக்குக் கொடுப்பதா பிறவிக் குணம்? எங்கே இந்த வீட்டிலிருந்து ஒரு மணி அரிசி வெளி யில் போகிறதா என்று பார்க்கிறேன்!

**புத:** எங்கள் அப்பா வியாழனார் அவர்கள் ஒழி......

**வியா:** ஏய்! நீ ஒழிக போட்டு விடாதே! என் பெய ரில் ஒரு மூட்டை அரிசி எழுதிக் கொள்ளடா!

**புத:** எங்கள் அப்பா வியாழனார் அவர்கள் வாழ்க!

**வியா:** பார்த்தாயா, எனக்குப் பிறவிக் குணம் இல்லை என்று சொன்னாயே!

புத: ஏனம்மா! உனக்கு மட்டும் பிறவிக் குணம் இல்லையா?

செவ்: ஏ அப்புா, என் கண்ணல்லவா! என் பேரிலும் ஒரு மூட்டை எடுத்துக் கொள்.

புத: திருமதி செவ்வாயி அம்மாள் வாழ்க!
[வியாழனும், செவ்வாயியும் உள்ளே செல் கிறார்கள்]

நிறை: (அங்குமிங்கும் பார்த்துவிட்டு) அத்தான் ஏ அத்தான்!

புத: அத்தான் எங்கே அக்கா இருக்கிறார்?

நிறை: இதோ அரிசி மூட்டை அடுக்கி இருக்கிறதே அதில் நடுமூட்டைக்குள் பார்.

புத: ஏன் அத்தான் இந்த மூட்டைக்குள் புகுந்து தொலைந்தாய்?

கதிரவன்: எல்லாம் காரணமாகத்தான்.

புத: அத்தான்! நீதான் சரியான மூட்டைப் பூச்சி.

நிறை: ஏன்டா! அத்தானை மூட்டைப் பூச்சி என் கிறாய்?

கதி: மூட்டைக்குள்ளிருந்து வந்திருக்கிறேன் அல்லவா? அதனால்தான் இப்படிச் சொல்கிறான்.

புத: அதிலே இருந்த அரிசியெல்லாம் எங்கே அத்தான்?

கதி: அதுதானடா ...... பெண்கள் பள்ளிக்கு ஒரு மூட்டை அரிசி தருகிறேன் என்று கூறி இருந் தேன். அதை இதிலிருந்து எடுத்துக் கொடுத் தேன். உங்கள் அப்பாவுக்குத் தெரிந்தால் சண்டைக்கு வருவாரே என்று மூட்டை மாதிரி அதற்குள் புகுந்திருந்தேன்.

புத: எனக்கு ஒரு மூட்டை அரிசி குறைந்து போய் விட்டதே அக்கா.

நிறை: தம்பி! உனக்குத்தான் இப்போது இரண்டு மூட்டை கிடைத்து விட்டதே!

கதி: இதையும் விரைவாக அப்புறப்படுத்தி விடு, உங்கள் அப்பா பார்ப்பதற்குள்; குட்டு வெளிப் பட்டுப் போகும். அப்புறம் இந்த இரண்டு மூட்டை யும் பறிபோய்விடும்.

புத: இதோ நொடியில் வண்டி வைத்துக் கொண்டு போய் விடுகிறேன்.

நிறை: அப்பா பேசியதெல்லாம் கேட்டுக் கொண்டு இருந்தீர்களா ?

கதி: ஆமாம்! உங்கள் அப்பாவுக்கு என்ன வேலை? என்னைப் பற்றிக் கோள் சொல்லுவதுதான் வேலை.

நிறை: அது கிடக்கட்டும். நடுவில் ஒரு கரடி விட் டாரே.

கதி: ஆமாம்! அதுதானே; யாரோ சோதிடன் வருகிறான் என்றாரே.

நிறை: ஆமாம்! அப்பாவின் அக்காள் மகனைத்தான் நான் கட்டிக்கொள்ள வேண்டுமாம்! நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் ?

புத: அத்தான்தானே! 'காத்திருந்தவன் பெண் டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனான்' என்று வாயிலே விரலை வைத்துக் கொண்டு உட் கார்ந்திருப்பார்.

[வாயில் விரலை வைத்து உட்கார்ந்து காட்டுகிறான்]

கதி: அடே பொடியா! அப்படி நடந்து விடுமா? அவன் மிரண்டுகொண்டு ஓடுகிருன், இல்லையா பார்.

புத: அப்படிச் சொல்! பலே அத்தான்!

கதி: நிறைமதி! அந்தச் சோதிடத்தைப் புகைவண்டியை விட்டு இறங்கும்போதே நான் கவனித்துக்கொள்கிறேன்.

நிறை: நான் வீட்டுக்குள் வந்ததும் கவனித்துக்கொள்கிறேன்.

புத: நான் வரும்போது வழியிலேயே கவனித்துக்கொள்கிறேன்.

(—திரை விழுகிறது—)

## இரண்டாவது காட்சி

இடம் : புகைவண்டி நிலையச் சாலை.

நேரம் : மாலை.

கதையுற்றோர் : கதிரவன், வெள்ளியம்பலம், சனி, புதன்.

[கதிரவனும் வெள்ளியம்பலமும் உரையாடிக் கொண்டே நடந்து வருகின்றனர்]

வெள்ளியம்பலம் : என்னப்பா கதிரவா? இப்பொழுது என்னசெய்ய வேண்டும் என்கிறாய்?

கதிரவன் : ஒன்றுமில்லையப்பா, இந்த வண்டியிலே சென்னையிலிருந்து ஒரு விருந்து வருகிறது. வருகிறவன் என் மாமாவின் அக்காள் மகனும். பெரிய சோதிடனும். அவன் இறங்கி ஊருக்குள் புகும்போது சரியான பாடம் கற்பிக்க வேண்டும். வியாழனார் வீடு என்றால் மனம் கலங்கும்படி செய்திகளைக் கொடுக்க வேண்டும்.

வெள் : இதுதானே! ஒன்றும் பெரிய செயலில்லையே. உன் மாமாவின் கருமித்தனம், பிசாசுப் புத்தி, பேயறைச்சல், வெறிநாய்ப் பேச்சு, குரங்குப் பிடுங்கல் இவற்றையெல்லாம் எடுத்து அளந்தால் போகிறது.

கதி : அதைத்தானடா ஒன்றுக்குப் பத்தாகப் பக்குவமாய்ச் சொல்லி வைக்க வேண்டும். நீ கொடுக்கும் மருந்தில் அவன் மாமா வீட்டிற்குப் போவோமா? ......ஊருக்கே திரும்புவோமா என்று நினைக்க

வேண்டும். அடே! அதோ புகைவண்டி வந்து விட்டது.

*வெள்:* ஆமாம், ஆமாம். நான் கவனித்துக் கொள் கிறேன்.

*கதி:* சிறிது நேரம், நீ பேசுகிறவரை நான் மறைந் திருந்து, சமயத்தில் வந்து கலந்து கொள்கிறேன்.

*வெள்.* அடே அப்பா! அவன் அடையாளத்தைச் சொல்லடா! அவன் உருவம்?

*கதி:* அதுதான் எனக்குத் தெரியாதடா! சோதிடன் என்று தெரியும். பார்த்துக் கொள்ளேன். ஒரு திருநீற்றுப் பட்டை, ரூபாய் வட்டத்தில் ஒரு சந்தனப் பொட்டு, இல்லாவிட்டால் ஒரு குங்குமப் பொட்டு. சமயத்தில் இரண்டும் சேர்த்து. இவை தானே சோதிடனுக்கும், பூசாரிக்கும் அடையாளம்.

*வெள்:* ஆம், ஆம்! நீ போ (சனி வருகிறான். அவன் மேல் வெள்ளி மோதிக்கொண்டு) என்னப்பா லாரி! என்ன 'ஆரன்' கீரன்! அடிக்காமல் வருகிறாய், எங்கே இப்படிப் புறப்பட்டாய்?

*சனி:* * என்னய்யா இது? யாரையா இது?

*வெள்!* மனிதன்தான். எருமை மாடன்று. ஆமாம். என்ன ஐயா கிளியை வளர்ப்பார்கள். நீர் என்ன குறுக்கு மூளைக்காரரோ? ஆந்தையை வளர்க்கி றீரே! ஆந்தைச் சோதிடரோ? இவ்வளவு சாமான்களோடு எங்கப்பாபோகிறாய்?

*சனி:* நான் சென்னையிலிருந்து வருகிறேன். ஆமாம். இந்த ஊரில் வண்டி கிண்டி கிடைக்காதா?

---

* ஏறத்தாழப் பார்ப்பனர் பேச்சில் உரையாடலாம்.

வெள் : ஏன், வண்டி கிடைக்குமே! கிண்டிதான் கிடைக்காது. அது சென்னைக்குப் பக்கத்தில் இருக்கிறது. அங்கே பார்த்திருக்கலாமே!

சனி : என்னய்யா இது! இந்த ஊர்ப் பேச்சே கிண்டலாய் இருக்கிறதே! ஆமாம். வியாழனார் வீடு எங்கே இருக்கிறது?

வெள் : (திடுக்கிட்டு) வியாழனார் வீடா! ஏன் ஐயா அங்கேயா போகிறாய்?

சனி : ஆமாம்! நான் அவர் வீட்டுக்குத்தான் போகிறேன்.

வெள் ; ஐயோ! பாவம்!

சனி : என்னய்யா இது? ஏன் அப்படிச் சொல்கிறீர்?

வெள் : ஒன்றுமில்லை. பொறியில் அகப்படப் போகும் எலியைப் பார்த்தால் பாவமாகத்தானே இருக்கும்?

சனி ; என்னய்யா இது? அவர் அவ்வளவு பொல்லாதவரா? அவர் எங்கள் மாமாவாயிற்றே!

வெள் : ஐயோ! போயிற்று; போயிற்று. இதில் அவர் வேறு உறவினரோ? ஆமாம், இதற்கு முன் அவர் வீட்டுக்கு வந்திருக்கிறீரா?

சனி : இல்லை. நான் சிறுபிள்ளையில் வந்தேன். பதினைந்து ஆண்டுகளாக அவரைப் பார்த்ததில்லை.

வெள் : அதனால்தான் தெரியாத்தனமாக வந்துவிட்டீர். சரி, போய்விட்டு வாரும்.

சனி ; என்னைப் பொறுத்தவரை அப்படி நடக்கமாட்டார் நீ போ ஐயா!

வெள் : எனக்கென்ன ஐயா! வியாழனார் வீட்டுக்கு விருந்து என்றே வந்தது இல்லை. அதுவே இந்த ஊரில் ஒரு புதுமை. அவரோ எச்சில் கையால்

காக்கை ஓட்டமாட்டார். விருந்துக்கா சோறு போடப் போகிருர்? அவர் போட்டாலும் எச்சில் இலையைத்தான் போடுவார். அந்த அம்மா இருக்கிருர்களே — அவர் மனைவி — அந்த அம்மா அந்த எச்சில் இலையையும் பிய்த்துத்தான் போடுவார்கள். அவர்களுக்கு ஒரு மகள் இருக்கிருள். பிய்ந்த இலையைத் தூக்கி உம் முகத்திலே போடும். ஒரு பயல் இருக்கிருன் — பெரிய குரங்குப் பயல். இலை பட்ட முகத்திலே ஏதாவது இருக்கும் என்று விழுந்து பிடுங்குவான். உம் ஆந்தையைப் பிடுங்கி ஆந்தைப் புலவுச் சோருக்கிடுவான். பாவம்! செல்லும் ஐயா!

சனி: என்னிடம் அப்படி நடக்க மாட்டார்கள். நீர் போம் ஐயா!

வெள்: சரி பட்டால்தான் தெரியும். (கதிரவன் வருகிருன்) கதிரவா, வா! உங்கள் வீட்டுக்கு விருந்தப்பா இழவு!

கதி: என்ன? என் வீட்டுக்கு விருந்தா?

வெள்: ஆமாம், பாவம்!

சனி: இவர் யார்?

வெள்: இவர் வியாழனர் வீட்டுக்கு மருமகனுகப் போகிறவர். அதாவது திரு வியாழனர் அவர்களது மேன்மை தங்கிய மனைவியார் திருமதி செவ்வாயி அம்மையார் அவர்களது அண்ணன் மகன். பெயர் கதிரவன். இந்த ஊர் நகராட்சி உறுப்பினர்.

கதி: பேசாமல் இரு அப்பா! நீங்கள் எங்கே போக வேண்டும்?

சனி: நான் சென்னையிலிருந்து வருகிறேன். நான் புகழ் பெற்ற சோதிடன். சனி என்ருல் சென்னையில் எல்லாருக்கும் தெரியும். வியாழனர் எனக்கு

மாமா. அவருடைய அக்காள் மகன் நான். திருமணத் தொடர்பாக என்னை வரச் சொல்லி எழுதி இருந்தார்.

வெள் : ஆமாம் பேச்சைப் பார்த்தால் பிள்ளைவாளாகத் தெரியவில்லையே.

சனி : பேசாமல் இருங்கள் ஐயா! எல்லாம் பெரிய மனிதர்கள் பழக்கம். அது இருக்க, மாமா எழுதியதனாலே கிளம்பி இங்கே வந்து......

வெள் : சிக்கிக் கொண்டீர்கள்.

சனி : ஆமாம். கதிரவன் வாள், இவர் என்ன இப்படியே சொல்கிறார்? இவர் சொல்வதில் எவ்வளவு பொய்?

கதி : ஊரில் இருக்கிறவர்கள் சொல்லுவதைச் சொல்லுகிறான். ஏனடா வெள்ளி! என் வீட்டு உண்மையை எல்லாம் வருகிற போகிற பயலிடம் எல்லாம் சொல்லலாமாடா? போடா நீ. (சனியின் நடையைக் காட்டி) பார்த்தீர்களா நடையை?

சனி : என்ன ஐயா இது, இப்படி மடங்கி 'கிடக்கிறார். இது என்ன நடை?

கதி : இது 'ட' நடை; அதுதான் 'டக்குறார்,' சரி போவோம்.

[புதன் வருகிறான்]

புத : அத்தான் எங்கே அத்தான் போகிறாய்? ஆமாம் இவர் யார்? கையில் ஒரு பெட்டி, படுக்கை, அரிக்கன், பை, விசிறி, குடை, கழுத்தில் ஒரு தாலி ஐயோ......! கொய் ...... ஆந்தை ...... ஆந்தை ...... ஏ கட்டை வண்டி! இல்லை, இல்லை ...... ஏ குப்பை வண்டி! எங்கே போகிறாய்?

சனி : என்னய்யா இது ? இது யார் ?

கதி : அடே புதா ! அப்படியெல்லாம் சொல்லாதே டா இவரும் உங்கள் அத்தான் தானடா. [சனியைப் பார்த்து] இவன் எங்கள் மாமா மகன். அதுதான் உங்கள் மாமா மகன் தான். பெயர் புதன்.

சனி : என்ன ஐயா இது! பிள்ளைப் பூச்சியாய் இருக்கும் போலிருக்கிறதே ! உங்கள் தோழன் சொன்னதன் அறிகுறி தெரிகிறது. பெரிய குறும்புக்காரன் போல இருக்கிறதே.

புத அடே பூசாரி ! என்ன சொன்னுய் ?

கதி : அடே, நீ பள்ளிக்குப் போடா !

புத : சரி, அத்தான் நான் வருகிறேன். பூசாரி ! கழுத்தில் தாலியா போட்டுக்கொண்டு போகிருய் ? பள்ளி விட்டு வந்து உன் தாலியை அறுத்து விடுகிறேன். ஆந்தையைப் பூந்தி பண்ணி விடுகிறேன் போ.

[போகிருன்]

கதி : அதோ தெரிவதுதான் நம் வீடு. நீங்கள் போங்கள். நான் நகராட்சி மன்றம் வரை போய் வருகிறேன்.

(—திரை விழுகிறது—)

# மூன்றாவது காட்சி

இடம்: வியாழனார் இல்லம்.

நேரம்: மாலை.

கதையுற்றோர்: வியாழனார், சனி, செவ்வாயி, நிறைமதி.

வியா: அடடா! வாடா மாப்பிள்ளை! வா, வா, ஆமாம் இவ்வளவு சாமான்களையும் நம் வீட்டிற்கா வாங்கி வந்திருக்கிறாய். எங்கே அந்தப் பை, மூட்டை எல்லாம் கொடு. ஏனடா இதென்னடா ஆந்தை. செவ்வாயி! இங்கே வா! நிறைமதி! நீயும் வா அம்மா! மாப்பிள்ளை வந்திருக்கிறான்.

செவ்: வாருங்கள் தம்பி வாருங்கள். நலந்தானே.

சனி: ஆமாம் மாமி, நலந்தான். மன்னிக்க வேண்டும். முன்னரே எழுத நேரமில்லை.

வியா: அதனால் குறையில்லை. நீ வந்ததே போதும். அது சரி, எப்படி இருக்கு உன் சோதிடத் தொழில்? நன்றாய் இருக்கிறதா?

சனி: ஏதோ, கடவுள் புண்ணியத்தில் நன்றாய் இருக்கிறது மாமா. எல்லாம் இந்த ஆந்தை வந்து சேர்ந்த பேறு. இப்போது எனக்கு இராச திசை. இப்போது நடக்கிற இலக்கினப்படி ஊர்ப் பயணம் அதிகமாக இருக்கும்.

வியா : அப்படித்தான் இருக்க வேண்டும். இந்த ஆந்தை வளர்ப்புத்தான் நன்ருக இல்லை. சரி, சரி, எல்லாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். நீ போய்க் களைப்பாறு. ஒரு தேர்தல் கூட்டம் நடக்கிறது. நான் அதைப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன். இதோ பார், செவ்வாயி! மாப்பிள்ளைக்கு, அது தான் உன் மருமகனுக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்.

செவ் : அதுக்கென்னங்க உங்கள் அக்காள் மகனுக்கு இல்லாததா ?

சனி : இருக்கட்டும், இருக்கட்டும். (வியாழனைரப் பார்த்துப் பையைக் கொடுத்து) மாமா இதிலேதான் என் சாத்திரம், புத்தகமெல்லாம் இருக்கின்றன. இதைப் பத்திரமாக வைத்திருங்கள். யாரிடமும் கொடுத்து விடாதீர்கள்.

வியா : அதுக்கென்ன ? என் பெட்டியிலேயே வைத்துப் பூட்டி விடுகிறேன். சமயத்தில் நீயே வந்து கேட்டாலும் கொடுக்க மாட்டேன். அது சரி, இங்கே பாரப்பா, இது உன் வீடுபோல ; ஒளிவு மறைவு இல்லாமல் பேசிப் பழகு. நான் இதோ வந்துவிடுகிறேன். வந்து எல்லாம் பேசிக் கொள்கிறேன். இந்த ஆந்தையை எங்கே விடுவாய் ?

சனி : அது என்னுடனே இருந்துவிடும் மாமா.
[வியாழனர் வெளியே போகிருர்]

செவ் : தம்பி எங்கே சாப்பிட்டு வந்தீர்கள் ?

நிறை : என்னம்மா அப்படிக் கேட்கிருய் ? அவர் மாயூரத்திலேயே சாப்பிட்டு வந்திருப்பார்.

சனி : இல்லை, இல்லை.

செவ் : திருவாருரில் சாப்பிட்டிருப்பீர்கள்.

*சனி :* இ ...... இ ......

*நிறை :* இல்லாவிட்டால் புகை வண்டி நிலையத்தில் இறங்கியதும் சாப்பிட்டிருப்பார்.

*சனி :* அதனால் பரவாயில்லை. நான் சாப்பாட்டைப் பெரிதாய்க் கருதுவது இல்லை. வழியிலே எங்கும் சாப்பிடுவதும் இல்லை. ஒன்று, புறப்படும் இடத்தில் சாப்பிடுவது; இல்லை என்றால் போய்ச் சேரும் இடத்தில் சாப்பிடுவது. சாப்பிட்டேன் — நேற்று இரவு புறப்பட்டபோது.

*செவ் :* ஐயோ, பாவம்! இவ்வளவு நேரம் சாப்பிடாமல் வந்திருக்கிறீர்களே! ஏனடி நிறைமதி! நம் வீட்டில் ஏதாவது இருக்கிறதா பார்'

*நிறை :* இருக்கிறது அம்மா. இல்லாமல் என்ன?

*செவ் :* அப்படியானால் சரி! நீங்கள் போய் கை கால் கழுவிவிட்டு வாருங்கள் (கதிரவன் உள்ளே போகிறான்) ஆமாம். என்னடி இருக்கிறதாகச் சொன்னாய்?

*நிறை :* நீ பேசாமல் இரு அம்மா! மூன்று நாள் பழைய சோறு அப்படியே இருக்கிறது அம்மா!

*செவ் :* சரி, சரி...... வந்து தொலைந்திடப் போகிறது, அந்தச் சனி. அந்தப் பழைய சோற்றைக் கொஞ்சம் போட்டு, தண்ணீரை நிறைய ஊற்றி—புதுத் தண்ணீரை ஊற்றி விடாதே, பழைய புளித்த தண்ணீரை ஊற்றிக் கொண்டு வா. போ......போ.

*நிறை :* சரி, இதோ வருகிறேன் அம்மா.

*சனி :* (உள்ளே வந்து) நல்ல வசதியான வீடுதான் மாமி உங்கள் வீடு.

செவ் : ஆமாம், நல்ல பசி போலிருக்கிறது. கைகால், கூடச் சரியாகக் கழுவாமல் வந்துவிட்டீர்களே !

சனி : இ......இ ......... ஒன்றுமில்லை ......... சாப்பிட்டு அதிக நேரமாய் விட்டதல்லவா ?

செவ் : ஏ நிறைமதி ! ஏதாவது இருக்கிறதாடி ?

நிறை : (உள்ளே இருந்தபடியே) இருக்கிறது அம்மா. இல்லாமல் என்ன. வியாழக்கிழமை பழையது அப்படியே இருக்கிறதம்மா !

சனி : ஆ... இன்றைக்கு என்ன கிழமை !

செவ் : இன்றைக்குத்தானே மாப்பிள்ளை............சனிக் கிழமை.

சனி : ஐயோ ! (நாட்களை எண்ணுகிருன்)

செவ் : நிறைமதி ! அதைப் போட்டு எடுத்துவாடி.

நிறை : எதிலே அம்மா போடுவது !

செவ் : என்னடி கேட்கிருய் ? குழம்புச் சட்டியிலே போட்டு நிறையத் தண்ணீர் ஊற்றி.........உன் சின்னப் புத்தியைக் காட்டாமல் நிறைய உப்புப் போட்டுக் கொண்டு வாடி.

சனி : மாமி ! அதிக நேரமானதிலே பசிகூடத் தெரியவில்லை. (தனக்குள்) புகை வண்டியை விட்டு இறங்கும்போது சகுனம் சரியாய்த்தான் இருந்தது.

நிறை : (சோற்றைக் கொண்டு வந்து வைத்து) இதோ இருக்கிறது, சாப்பிடுங்கள்.

செவ் : ஏனடி ! கடித்துக்கொள்ள ஒன்றும் கொண்டு வந்து வைக்கவில்லையா ?

நிறை : ஏனம்மா ! பட்ட மிளகாய் தருவோமா ? இல்லை, கொத்துமல்லி கொடுப்போமா ?

செவ் : கொத்துமல்லியை எப்படிக் கடிப்பார்? பட்ட மிளகாயே கொண்டு வாடி!

சனி : மாமி! உண்மையாகவே எனக்குச் சாப்பாடே வேண்டாம். வந்த அயர்ச்சியில் பசிக்கவே இல்லை.

செவ் : அப்படிச் சொல்லக்கூடாது மாப்பிள்ளை. வந்த இடத்தில் செய்யும் மரியாதையை மறுக்கலாமா?

நிறை : அவர்கள் எல்லாம் நம் வீட்டில் சாப்பிடுவார்களா?

சனி : அப்படி ஒன்றுமில்லை......

செவ் : உங்கள் மாமா 'நம் வீடு மாதிரிப் பழகு' என்று சொல்லிவிட்டுப் போனாரே! நீங்கள் என்ன இப்படி இருக்கிறீர்கள்? பேசாமல் சாப்பிடுங்கள். (செவ்வாயி, நிறைமதி நீங்கி உள்ளே செல்கின்றனர்)

சனி : (இரண்டு வாய் அள்ளிப் போட்டுக் கொண்டே) ஐயோ! 'எக்கச் சக்கமா' வந்து மாட்டிக் கொண்டேனே! அந்தப் பையன் சொன்னது சரியாய்த்தான் இருக்கிறது. இதைவிட்டு எப்படி மீள்வது என்றே தெரியவில்லையே...பை வேறு மாமாவிடம் மாட்டிக் கொண்டதே.

செவ் : (உள்ளே வந்து) என்ன மாப்பிள்ளை, சாப்பிட்டாயிற்றா?

சனி : ஆயிற்று. ஆயிற்று. நிறைவாய் இருக்கிறது முதலில் இவற்றையெல்லாம் எடுங்கள்.

செவ் : ஆமாம் ...... மாப்பிள்ளைக்குச் சோதிடந்தான் பிழைப்போ?

சனி : ஆமாம். ஆமாம்.

செவ் : அப்படியானால் நம் நிறைமதி சாதகத்தைக் கொஞ்சம் பார்க்கிறீர்களா ?

சனி : வண்டியில் வந்தது சிறிது களைப்பாக இருக்கிறது. சற்று படுத்துவிட்டுப் பார்க்கிறேனே.

செவ் : இதைப் பார்ப்பதற்கு என்னங்க பெரிய களைப்பு ? நிறைமதி ! உன் சாதகத்தை எடுத்துக் கொண்டு வா !

நிறை : சாதகமா ? அந்த இழவு எங்கம்மா இருக்கிறது ?

செவ் : பாருடி, அந்த மூலையிலே அடுக்குப் பானைக்குக் கீழே இருக்கிறது.

[உள்ளே போய் நின்றவாறே]

நிறை : ஏனம்மா சுற்றி ஒரே குப்பையாய் இருக்கிறதே!

செவ் : மெள்ள மேல் பானையை எல்லாம் இறக்கி வைத்துவிட்டுப் பானையோடு எடுத்து வாடி.

(நிறைமதி பானையைக் கொண்டுவந்து வைக்கிறாள்)

செவ் : அதை எடுத்துப் பாருங்கள் மாப்பிள்ளை. ஒன்று மில்லை திறந்து பாருங்கள்.

சனி : இல்லை மாமி; அதற்குள்ளே ஒரே குப்பையாய்த் தெரிகிறதே ! கரப்பான் வண்டு வேறு நிறைய இருக்கிறது.

செவ் : ஒன்றும் பயப்படாதீர்கள். லெட்சுமி வண்டு தான். கையை விடுங்கள், ஒன்றும் செய்யாது.

நிறை : பயப்படாமல் கையை விட்டு எடுங்கள்.

சனி : (கையை விட்டு) ஐயோ ஏதோ சுருக்கென் குத்துகிறதே !

*நிறை* : ஒன்றுமில்லை ஓலை குத்தியிருக்கும்.

**செவ்** : அதெல்லாம் ஓலை ஒன்றும் குத்தாது. ஏதாவது தேள் கொடுக்கு இருக்குமோ ?

**சனி** : என்ன ? தேளா ?

**செவ்** : என்ன. தம்பி ! 'சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை' என்பார்கள். எடுங்கள் ; திறந்து பாருங்கள்.

**சனி** : (எடுத்துப் புரட்டி) மேஷம், ரிஷபம், கன்னி, துலாம். ஒன்பதிலே சூரியன் பார்க்கிறான். [வாய்க்குள்] எனக்கு அஷ்டமத்திலே சனி. அதுதான் இங்கே வந்து மாட்டிக் கொண்டேன் போலிருக்கிறது. [கனைத்த குரலில்] அடடா பாவம். அருமையான சாதகம். ஆனால் ஒரு பெரிய கோளாறு.

**செவ்** : என்ன தம்பி அப்படி ?

**சனி** : ஒன்றுமில்லை மாமி, எதற்கும் பெண்ணின் கையையும் நீட்டச் சொல்லுங்கள். ரேகையையும் பார்த்து விடுகிறேன்.

**செவ்** : அம்மா நிறைமதி ! கையைக் காட்டு.

**சனி** : ஆம்... ஆம்... அடடே.

**செவ்** : என்ன மாப்பிள்ளைத் தம்பி ?

**சனி** : மாமி, கொஞ்சம் திருநீறு கொண்டு வாருங்கள். ஆருடம் பார்த்திடுவோம்.

**செவ்** : நிறைமதி கொண்டு வந்து கொடடீ !

**நிறை** : இதோ இருக்கிறது.

*சனி :* நிறைந்த செவ்வாய்த் தோசம் இருக்கிறது சாதகத்தில்.

*செவ் :* அது என்ன செய்யும்?

*சனி :* அது என்ன செய்திடப் போகிறது பெரிதாய்? தாலியை அறுக்கும் அவ்வளவுதான்.

(—திரை விழுகிறது—)

## நான்காவது காட்சி

இடம்: வியாழனார் இல்லத் தனி அறை

நேரம்: காலை.

கதையுற்றோர்: சனி, கதிரவன், வியாழனார்.

சனி: ஆஞ்சநேயா! இப்படி வந்து என்னைச் சிக்க வைத்தாயேடா. இந்தக் குரங்குக் கூட்டத்துக்கு நடுவிலிருந்து நான் எப்படியப்பா தப்பித்துப் போவேன்? என் மாமா வியாழனாரோ மகளைக் கட்டிக்கொள்ள வேண்டும் என்று வம்பு செய்கிறார். வீட்டில் இருக்கும் பெண்களோ அரக்கிகளாக இருக்கிறார்கள். மாப்பிள்ளை ஆகிவிட்டால் மகள் மஞ்சள் அறைக்கச் சொல்லுவாள் போலிருக்கிறது. மாமியார் மிளகாய் அறைக்கச் சொல்வாள் போலிருக்கிறது. பள்ளிக்குப் போயிருக்கிறதே பிள்ளைப் பூச்சி அவன் வந்தால் என்னைக் கொலையே செய்திடுவான் போலிருக்கிறது. ஏ, ஆஞ்சநேயக் கடவுளே! எனக்கு ஒரு வழி சொல்ல மாட்டாயா?

கதி: வீணாக ஏன் அஞ்சுகிறாய்? நான் வழி சொல்கிறேன்.

சனி: (திடுக்கிட்டு) ஆ! என்ன! ஆஞ்சநேயரே காட்சியாயிட்டாரா? ஏதோ குரல் கேட்டதே!

கதி: நான்தான் பேசினேன்.

சனி : ஓ கதிரவன் அவர்களா? வாருங்கள், வாருங்கள் - நான் சொன்னதெல்லாம் கேட்டுக்கொண்டு தான் இருந்தீர்களா?

கதி : ஆமாம், பாவம் நீங்கள் வீணுகக் கலக்கப்பட்டுப் போயிருக்கிறீர்கள்.

சனி : என்னங்க, 'வீணுகக் கலக்கம்' என்கிறீர்கள். உங்கள் நண்பர்தான் நல்ல மனிதர். அவர் வருணித்தபடியே இருக்கிறது என் மாமா வீடு. உங்கள் ஒருவரைப் பார்த்தால்தான் நல்ல மனிதராகத் தெரிகிறது. நீங்கள்தான் என்னை எப்படியும் காப்பாற்ற வேண்டும். எப்படியாவது இந்த வீட்டை விட்டுப் போக வேண்டும்.

கதி : அப்படி ஒன்றும் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போய் விடாதீர்கள்.

சனி : எங்கே போவது? என் சாஸ்திரப் பைதான் மாமாவிடம் மாட்டிக் கொண்டதே. அது இல்லாமல் எங்கே போய் எப்படிப் பிழைப்பது?

கதி : அதற்கெல்லாம் ஒன்றும் அஞ்சாதீர்கள்.

சனி : உங்களைத்தான் நம்பி இருக்கிறேன். நான் ஆஞ்சநேயப் பெருமானை நினைத்தேன். அவன் தோன்றினாற்போல நீங்கள் வந்து நிற்கிறீர்கள். அவருடைய முகப் பொலிவு உங்களிடம் இருக்கிறது. நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்,

கதி : இதற்கெல்லாம் அஞ்சக்கூடாதய்யா! நான் ஒன்று சொல்கிறேன்; அதன்படி நடந்து கொள்ள வேண்டும். எங்கள் மாமா வந்தால் அவ

ரிடம் (காதில் ஏதோ சொல்கிருன்) சரி, நான் வருகிறேன்.

(வியாழனர் வருகிருர்)

வியா : என்னடா, மாப்பிள்ளை சனி நிறைமதி சாத கத்தைப் பார்த்தாயாமே எப்படி இருக்கிறது ?

சனி : (தனக்குள் அப்படியே செய்திடலாம்) ஆமாம், மாமா பார்த்தேன்.

வியா : எப்படி இருக்கிறது ?

சனி : நல்ல சாதகந்தான், நல்ல அமைப்புதான். ஆனல் பாருங்கள்.........

வியா : என்னடாப்பா, சொல்லு என்ன ஆனல் ?

சனி : ஒன்றுமில்லை. ஒரே ஒரு சின்னக் களங்கம் மாமா என் மேலே சினந்து கொள்ளக்கூடாது. ஏனென்ருல் நமக்குள் நாம்தானே. வெளிப்படை யாய் மறைக்காமல் சொல்கிறேன். பெண்ணுக்குக் கடுமையான செய்வாய்த் தோசம். திருமணப் பந்தலிலேயே மாப்பிள்ளையை முறித்துப் போட்டு விடும்.

வியா : ஆ! ஆ! என்ன இது ? என்னப்பா இப்படிச் சொல்கிருய் ?

சனி : கலங்காதீர்கள் என்ன செய்வது ? அப்படி அமைந்திருக்கிறது.

வியா : என்னப்பா சனி, நான் என்னென்னவோ நினைத்திருந்தேன், இப்படி இருக்கிறதே ! எனப்பா கணக்கெல்லாம் சரியாகப் பார்த்தாயா ? ஏதாவது 'விட்டு, கிட்டு' இருக்கப் போகிறது.

சனி : நானு விடுவேன், திட்டம் போட்டு......பார்த்துச் சொல்லியிருக்கிறேன்.

வியா : என்னடா மாப்பிள்ளே, நீயும் இப்படிச் சொல்லி விட்டால் ...... வேறு ஏதும் வழியில்லேயா பார்.

சனி ; நான் என்ன மாமா செய்வேன்? அவன் எழுதின எழுத்து அது. மாற்ற முடியுமா என்ன ?

வியா : மாப்பிள்ளே நான் மிகவும் ஆர்வமோடு இருந்தேனடா. உனக்கு என் மகளேக் கட்டிப் பார்க்க வேண்டும் என்று இருந்தேனே. பெண்ணும் தாயும்கூட அதை விரும்பாமல் என் ஆசையில் பாதி மண்ணேப் போட்டார்கள். இப்போது நீ மீதி மண்ணேயும் போட்டு விடுவாய் போலிருக்கிறதே !

சனி : நான் என்ன மாமா செய்வேன் ? தெரிந்திருந்தும் பாழுங் கிணற்றிலே விழச் சம்மதிக்கவா நான்.

வியா : (சிந்தித்து) ஏன்டா மாப்பிள்ளே ! நீ தான் சோதிடத்தையே அடக்கி ஆள்பவனுயிற்றே; இந்த மேடம், கன்னி, துலாம் இதெல்லாம் நீ சொன்னபடி ஆடுமே ; நீயே இந்தச் செவ்வாய்க் களங்கமுள்ள பெண்ணேத் திருமணம் செய்து கொண்டால் உன்னே அந்தக் களங்கம் என்ன செய்ய முடியும் ? என்ன நான் சொல்வது ?

சனி : (தனக்குள். ஏது, மாமா சுற்றி வளேக்குகிரே) மாமா ! உங்களுக்குத் தெரியாது மாமா. நம்புகிறவனுக்குத்தான் கடவுள், சாத்திரம், சோதிடம் எல்லாம். அதோடு பக்தனேத்தான் பரமன் சோதிப்பார். ஏன் மாமா 'எஞ்சினே' தண்டவாளத்தை விட்டு நகர்ந்தால் வண்டியெல்லாம் என்ன மாமா செய்யும் ? அது போல தாங்களே சாதகத்தை மதிக்காமல் நடந்தால் அது சாபக் கேடாகவல்லவா முடியும் ? சோதிடப் பிசாசு என்னேச் சுற்றிக் கொள்ளும் மாமா. ஏன் மாமா ! யாரோ உங்கள்

பெண்ணைக் கட்டிக் கொள்ள இருப்பதாகச் சொன்னீர்களே யார் அவர்"

வியா : ஆமா, ஆமா என் வீட்டுக்காரியின் அண்ணன் மகன். அவன் ஒரு போக்கிலிப் பயல். அவனுக்குக் கட்டக்கூடாது என்பதுதானே என் முடிவு

சனி : மாமா! அந்த முடிவை மாற்ற வேண்டும். உங்கள் எண்ணம், உங்கள் மகளை நான் கட்டிக் கொள்ள வேண்டும்; அதை நீங்கள் பார்க்க வேண்டும்! அதுதானே உங்கள் அவா?

வியா : அதுதான் மாப்பிள்ளை. அது முடிய வழி சொல்.

சனி : நீங்கள் சொன்ன அந்த நாத்திகப் பயலைப் பற்றி ஒன்றும் கவலை யில்லையே.

வியா : அவன் குட்டிச்சுவராகட்டும். எனக்கென்ன?

சனி : அப்படி யென்றால் நான் சொல்வதைக் கேளுங்கள். ஒரு நாளைப் பார்த்து அந்தப் பயலையே உங்கள் மகளுக்குத் தாலியைக் கட்டச் சொல்லுங்கள்.

வியா : என்ன வழியடா சொல்லுகிறாய் மாப்பிள்ளை' மடச் சாம்பிராணி வழி சொல்லுகிறாய்?

சனி : ஆமாம் மாமா நான் சொல்வது சாம்பிராணி தான். முதலில் பாருங்கள் சாம்பிராணி குப்பை மாதிரி இருக்கும். நெருப்பில் போட்டுப் புகைத்த பிறகுதான் மணக்கும். அதுபோலத்தான் என் கருத்தும். கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள் மாமா. அவனுக்குக் கட்டினால் என்ன ஆகும்?

வியா : என் மகளை இழுத்துக்கொண்டு எங்காவது போவான்.

சனி : என்ன மாமா! சிந்தித்துச் சொல்லுங்கள் சோதிடப்படி என்ன ஆவான்?

வியா : ஆமாம் சோதிடப்படியா ?

சனி : செவ்வாய்க் களங்கம் என்ன செய்யும் ?

வியா : ஓ செவ்வாய்க் களங்கமா ?

சனி : மணவறையில் சாகடிக்கும் அவனை.

வியா : அடே மாப்பிள்ளை அப்போது என் பெண் தாலி அறுக்குமேடா !

சனி : அறுந்த தாலியைக் கட்டத்தான் நான் இருக் கிறேனே மாமா ?

வியா : அப்புறம் உன் கதி ?

சனி : களங்கம் ஒரு உயிரோடு கழிந்து விடும் மாமா ?

வியா : அப்படியா ? ஆமாமடா மாப்பிள்ளை ! தாலி யறுந்த பெண்ணை மறுபடியும் திருமணம் செய்து கொள்வது நம் குடும்பப் பழக்க மில்லையே ?

சனி : ஆமாம் மாமா ! மணவறையிலே மாப்பிள்ளை சாவது மட்டும் உங்கள் குடும்பப் பழக்கமா மாமா ?

வியா : இ......இ......அதுவும் சரிதான். அப்படியா ஞல் அப்படியே ஏற்பாடு செய்யட்டுமா ?

சனி : செய்யட்டுமாவாவது ? செய்து விட்டேன் என்று சொல்லுங்கள் மாமா. போங்கள். (போகிருர்) தனக்குள்) அப்பா, பகுதியளவு தப்பித்துக் கொண் டேன். ஒரு நாள் விருந்தோம்பலே ' இந்த வீட்டு வேலைக்காரனுகக்கூட இருக்காதே ' என்கிறது. மாப்பிள்ளை ஆகிவிட்டால் ! ஐயோ போதும் ! ஆஞ்சநேய பகவானே இல்லை...இல்லை...ஏ, கதிரவ பகவானே நீதான் காப்பாற்ற வேண்டும்.

(—திரை விழுகிறது—)

## ஐந்தாவது காட்சி

இடம் : வியாழனார் இல்லம்.

நேரம் ; மாலை.

கதையுற்றோர் : வியாழனார், செவ்வாயி, நிறைமதி சனி.

[செவ்வாயி; நிறைமதி உட்கார்ந்திருக்கிறார்கள். வியாழனார் வந்து நாற்காலியில் அமர்கிறார்.]

வியா : அப்பப்பா! குடும்பத்திலே ஒரு வழியாக மங்களகரமான காரியம் நடக்க இப்போதுதான் வேளை ஒத்து வந்திருக்கிறது.

செவ் : என்ன, ஏதோ கதை விடுகிறீர்கள்.

வியா : இங்கே பார் செவ்வாயி, நான் ஒரு வகையாக முடிவுக்கு வந்து விட்டேன். உங்கள் கருத்துக்கு மாறுபாடாக நடப்பது எனக்குப் பிடிக்கவில்லை.

நிறை : ஆமாம் அப்பா, நாங்களும் உங்கள் கருத்துக்கு மாறுபாடாகப் போவது இல்லை என்ற முடிவுக்கு வந்து விட்டோம்.

வியா : என்னம்மா அது ?

செவ் : ஒன்றுமில்லை, உங்கள் விருப்பப்படியே நிறைமதி திருமணத்தை முடிப்பது என்று முடிவுக்கு வந்துவிட்டோம்.

வியா: அப்படிச்சொல். குடும்பம் என்றால் இப்படி யல்லவா இருக்க வேண்டும், ஒரே ஒற்றுமையாக. சரி, சரி திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் கவனி. மாப்பிள்ளைக்கு என்ன துணி வேண்டும் என்று கேள்.

செவ்: நான் கேட்பதா? நீங்களே கேட்டு விடுங்களேன்.

வியா: நான்தான் அவனோடு பேசுவது இல்லையே.

நிறை: ஆமாம். அப்பா யாரைச் சொல்லுகிறார்கள் அம்மா?

செவ்: அதுதானடி எனக்கும் புரியவில்லை.

வியா: யாரைச் சொல்லுவேன் செவ்வாயி! உன் அண்ணன் மகன், என் ஆசை மருமகனைத்தான் சொல்கிறேன்.

செவ்: என்னது? அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள். உங்கள் அவாப்படி உங்கள் அக்காள் மகனுக்கே திருமணத்தை முடியுங்கள்.

நிறை: ஆமாம் அப்பா, எனக்கும் அதுதான் அப்பா எண்ணம். இந்த அத்தான்தான் பிழைப்புக்கு ஒன்றும் வழியில்லாமல் இருக்கிறார். அவராவது சோதிடத்தில் நிறையச் சம்பாதிக்கிறார். சாத்திரங்களை எல்லாம் படித்த அறிவாளியாக இருக்கிறார். அவருக்கே ஏற்பாடு செய்யுங்கள்.

வியா: நீ பேசாமல் இரு அம்மா! நீ சின்னப் பிள்ளை, உனக்கு ஒன்றும் தெரியாது. நானும் அவனைப் பற்றி என்னவோ பெரிதாய் நினைத்துக்கொண்டு இருந்தேன். நான்கு காசு சேர்த்து வைத்திருப்பான் என்று நினைத்தால், வெறும் பயல். பிழைப்பும் மதிப்பான பிழைப்பில்லை. என் மதிப்புக்கு ஒரு

சோதிடக்காரனுக்கா என் பெண்ணைக் கொடுப்பது? பொருத்தமேயில்லை! என்ன செவ்வாயி! கிளியாக வளர்த்துப் பூனையிடமா கொடுப்பது? நீயே சொல்.

செவ்: ஆமாம். உங்களுக்கென்ன திடீரென அறிவு முளைத்து வந்தது?

வியா: நான்கையும் சிந்தித்துப் பார்த்த பிறகுதான் புரிகிறது.

செவ்: எந்த நான்கையும்? பிணந் தூக்கிச் செல்லும் அந்த நான்கையுமா?

வியா: சே, சே! திருமணத்தைப் பற்றிப் பேசும் போது, 'பிணம்! 'கிணம்' என்று பேசுகிறாயே!

செவ்: இங்கே பாருங்கள், உங்கள் கெட்ட எண்ணம் எங்களுக்கு நன்றாய்ப் புரிகிறது. அந்தச் சோதிடம் இருக்கிறதே, அதுதான் சனி. அது சொல்லிற்று நிறைமதிக்கு நிறைந்த செவ்வாய்க் களங்கம் இருக் கிறது, மணவறையிலேயே மாப்பிள்ளையை முறித் துப் போட்டுவிடும் என்று. அப்படி இருக்கையில் என் அண்ணன் மகனைக் கட்டி, அவனை மணவறை யிலேயே சாகடிக்க வேண்டும் என்றுபார்க்கிறீர்கள். இதோ பாருங்கள் உங்கள் கெட்ட எண்ணத்திற்கு நீங்கள் ஒருநாளும் உருப்படவே மாட்டீர்கள்.

வியா: செவ்வாயி! பெண்பிள்ளைத் தன்மையாகப் பேசுகிறாய். அந்தப் பயல் செவ்வாய்க் களங்கம் என்று சொன்னான்?

செவ்: ஆமாம், இதோ பாருங்கள் உங்கள் நாடகமெல் லாம் புரிகிறது. அந்தச் சனியை இங்கே கூப்பிடுங் கள். அதுதான் நிறைந்த செல்வாய்க் களங்கம் என்று சொல்லிற்று, கூப்பிடுங்கள் நானே கேட் கிறேன்.

வியா: அதற்கென்ன? அவனையே கூப்பிட்டுக் கேட்டால் போகிறது. நிறைமதி அவனைக் கூப்பிடம்மா.

நிறை: எனக்கு வெட்கமாய் இருக்கிறது அப்பா நீங்களே கூப்பிடுங்களப்பா.

வியா: அடே அப்பா சனி! சனி, இங்கே வாடாப்பா.

[சனி வருகிறான்]

சனி: ஏன் மாமா?

வியா: இங்கே வா. உட்கார். ஏனடாப்பா! நிறைமதிக்கு நிறைந்த செவ்வாய்க் களங்கம் இருக்கிறதென்று உன் மாமியிடமா சொன்னாய்?

சனி: ஆமாம் மாமா. அதனாலே என்ன?

செவ்: பார்த்தீர்களா? அதனாலே என்னவா!

நிறை: மாப்பிள்ளை மணவறையில் மண்டையைப் போட்டு விடுவார்.

வியா: ஏன்டா, அப்படியா சோதிடம் சொல்கிறது?

சனி: ஆமாம் மாமா; அதிலென்ன ஐயம்? ஆனால், அது மாப்பிள்ளை சாதகத்தைப் பொறுத்து இருக்கிறது. மாப்பிள்ளை சாதகத்திலேயும் நிறைந்த செவ்வாய்க் களங்கம் இருந்தால், களங்கத்திற்குக் களங்கம் அடி பட்டுப் போகும்.

செவ்: ஏன் மாப்பிள்ளை, கதிரவனுக்குச் செவ்வாய்க் களங்கம் இருக்கிறதா?

சனி: ஆமாம் மாமி. நான் அப்புறந்தானே அதைப் பார்த்தேன்.

நிறை: ஆமாம், இவருக்கு அத்தான் சாதகம் ஏது?

சனி: என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? நிறைமதியின் சாதகத்துக்குப் பின் பக்கந்தான் அவர் சாதகமும் எழுதி யிருக்கிறது.

*செவ் :* ஏன் நீங்கள் எங்களிடம் சொல்லவில்லை. அப்படியானால் முடித்து விடலாமே. ஏனப்பா மாப்பிளைத் தம்பி, நன்றாய்ப் பார்த்தீர்களா? அவனுக்கும் செவ்வாய்க் களங்கம்தானா?

*சனி :* நன்றாய்ச் சொல்லிவிட்டேன்; எவ்வளவு திட்டத்தோடு சொல்கிறேன்......

*செவ் :* அப்படியானால் அப்படியே ஏற்பாடு செய்யுங்கள்.

*வியா :* ஆ! ஆ! எனக்கு ஒன்றும் சரியாக விளங்கவில்லையே! என்னடாப்பா சனி! ஒரே குழப்பமாய் இருக்கிறதே. முடிவாய்ச் சிந்தித்துச் சொல்லடா. அவனுக்கே முடித்துவிடலாமா?

*சனி :* அதெல்லாம் ஒரு அச்சமும் வேண்டாம் மாமா. நினைத்தபடியே முடியும்.

*நிறை :* அப்பா! அதெல்லாம் வேண்டாம் அப்பா. அத்தான் திருமணமென்றால் அவர் வேறு கண்டிப்புப் போடுவார்.

*வியா :* என்னம்மா அந்தக் கண்டிப்பு?

*நிறை :* வந்து அப்பா ...... அது வந்து.

*செவ் :* சொல்லேனடி சீர்திருத்தத் திருமணம்தான் செய்து கொள்வார் என்று.

*நிறை :* ஆமாம் அப்பா. சீர்திருத்தத் திருமணம்தான் செய்து கொள்வேன் என்று சொல்கிறார்.

*வியா :* என்னது? நாத்திகப் பயல்; அவன் புத்தியைக் காட்டுகிறானா? இது என்ன ஆனாலும் சரி, நான் அதற்கு ஒத்துவர மாட்டேன். திட்டவட்டமாகச் சொல்லி விட்டேன். உங்கள் இரண்டுபேர் விருப்பத்தின்படியும் உன் அண்ணன் மகனுக்கு நிறைமதியைக் கட்டிக் கொடுக்க ஒத்துக் கொள்

கிறேன். ஆனால், மறையோதி, ஐயர் வந்து எல்லாம் முழங்க நெருப்புக்கு முன்னாலே செய்கிற திருமணம் என்றால் அவனைக் கலந்து நாளைக்கே முடிவைச் சொல்.

*நிறை :* முடிவு என்னப்பா, அத்தான் ஒரு கொள்கைப் பிடிப்புக்காரர். பிடித்தால் உடும்புதான்; விட்டால் மூச்சை விட்டாலும் விட்டு விடுவார்; கொள்கையை விடமாட்டார்

*செவ் :* அதுதானுங்க முடிவு.

*விடா :* ஒத்துக் கொள்ளாததுதான் என் முடிவு.

(—திரை விழுகிறது—)

## ஆருவது காட்சி

இடம் : வியாழனர் இல்லத் தனி அறை.

நேரம் : மாலை.

கதையுற்ருர் : சனி, வியாழனர், கதிரவன், செவ்வாயி

சனி : (தனியாக) ஆகா! இடையிலே இந்தப் பையன் வேறு கரடி விட்டிருக்கிருனே! ஒரு வகையாகத் திருமணத்தை முடித்து, ஓடிவிடலாம் என்று பார்த்தேன். சீர்த்திருத்தத் திருமணம் என்று சொல்லி மாமாவை முரண்டு பண்ண வைத்துவிட்டானே.

(கதிரவன் வருகிருன்)

கதிரவன்வாளா வாங்க! உங்கள் கருத்துப் படியே எல்லாம் செய்தேன். உங்கள் திட்டப்படி முடிந்துவிடும் போலிருக்கிறது! நீங்கள் இடையிலே ஒரு புதை வாணத்தைப் போட்டிருக்கிறீர்களே. சீர்திருத்தத் திருமணம்தான் செய்து கொள்வேன் என்று.

கதி : ஆமாம், அதுவும் ஒரு காரணமாகத்தான். அதற்குத்தான் உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். இங்கே பாருங்கள் எங்கள் மாமா வந்தால் ...... (காதில் ஏதோ சொல்கிருன்)

சனி : நல்ல கருத்து, அப்படியே செய்கிறேன்.
[கதிரவன் செல்ல, வியாழனர் வருகிருர்]

வியா : அடே! மாப்பிள்ளை சனி, எங்கேடா இருக்கிருய் ?

சனி : இங்கே இருக்கிறேன் மாமா! வாருங்கள் உட்காருங்கள் ?

வியா : என்னடா அப்பா, நீ என்னிடம் ஒரு வகையாகச் சொன்னுய். அங்கே மாப்பிள்ளைக்குச் செவ்வாய்க் களங்கம் இருக்கிறது என்கிருயே; அது உண்மையா என்ன ?

சனி : மாமியைச் சரிக்கட்டுவதற்காக அப்படிச் சொன்னேன் மாமா.

வியா : 'சோதிடம் ஒரு பித்தலாட்டம்' என்று நேரு அடிக்கடி சொல்லி வந்தது பொருத்தமாய்த்தான் இருக்கிறது.

சனி : அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் மாமா, பித்தலாட்டத்தைப் பித்தலாட்டத்தால்தானே மறுக்க வேண்டும்.

வியா : சரி, அதற்குத்தான் அவன் தடங்கல் செய்து விட்டான். நான் சீர்திருத்தத் திருமணத்துக்கு ஒத்து வரவே மாட்டேன். இப்போது என்ன சொல்கிருய் ?

சனி : மாமா! இப்படி யெல்லாம் வீம்பு பிடிக்கக் கூடாது. உங்களுக்கென்ன, நான் உங்கள் மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். அவ்வளவு தானே!

வியா : ஆமாமடா, அவ்வளவுதான்.

சனி : அதற்குக் கதிரவனைப் பலி கொடுத்துத்தான் ஆக வேண்டும்.

வியா : அதுதான் சரி என்று சொல்லி விட்டேனே மாப்பிள்ளை ?

சனி: அதற்குச் சீர்திருத்தத் திருமணந்தான் செய்ய வேண்டும்.

வியா: என்னடாப்பா, நீயே இப்படிச் சொல்கிறாயே!

சனி: ஆமாம் மாமா! களங்கம் இருக்கிறதில்லையா? மறையெல்லாம் ஓதி நெருப்புக்கு முன்னாலே புரோகிதக் கல்யாணம் செய்தால் களங்கத்துக்குப் போக்கு வீடு வந்தாலும் வந்து விடும். களங்கம், ஒன்றும் செய்யாமல், மாப்பிள்ளைக்கும் தீங்கில்லாமல் மங்கலமாய் முடிந்தாலும் முடிந்து விடும்.

வியா: அப்போது என்ன சொல்கிறாய்?

சனி: மந்திரம் 'கிந்திரம்' இல்லாமல் திருமணம் செய்தால் களங்கம் கட்டாயம் மாப்பிள்ளையை அடிக்கும்.

வியா: ஆமாம் மாப்பிள்ளை, நீ சொல்வது சரிதான்

[செவ்வாயி வருகிறாள்]

அப்படியே ஏற்பாடு செய்கிறேன். இந்தா செவ்வாயி!

செவ்: ஏனுங்க!

வியா: இங்கே வா! சும்மா இத்தத் திருமணத்தைச் சுற்றிச் சுற்றி விடுவதில் எனக்கு விருப்பமில்லை. உன் அண்ணன் மகன் விருப்பப்படியே சீர்திருத்தத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டேன்.

செவ்: அப்படி வாருங்கள் வழிக்கு. என்றைக்குத் திருமணத்தை வைத்துக் கொள்வது?

வியா: ஏண்டாப்பா சனி! ஒரு இழவு நாளைப் பார்த்துச் சொல்லடா.

சனி: இதோ பார்த்துவிடுகிறேன் மாமா. நம் சாத்திரப் பையைக் கொஞ்சம் எடுக்கெத்தூண்டு வாருங்கள்.

*வியா :* என்னடா, இவ்வளவு படித்திருக்கிருய், ஒரு நாள் பார்க்க சாத்திரப் பை வேண்டுமா? ஏதாவது ஒரு நாளைச் சொல்லுடா.

சனி : ஞாயிற்றுக்கிழமை வைத்து விடலாம் மாமா. ஞாயிற்றுக்கிழமை காலை சரியாக 11-30 மணிக்கு வைத்து விடலாம்.

*வியா :* ஏன்டா 12 மணிக்கு எமகண்டம் ஆயிற்றே!

சனி : அட, தெரிந்துதான் மாமா சொல்கிறேன். நீங்கள் பேசாமல் இருங்கள்.

*வியா :* ஒகோ! சரி, சரி ஞாயிற்றுக்கிழமையே வைத்துக் கொள்வோம். 11-30 மணிக்கே வைத்துக் கொள்வோம். எல்லாம் நாம் நினைக்கிறபடி நடந்தால் சரி.

(—திரை விழுகிறது—)

## ஏழாவது காட்சி

இடம் : வியாழனார் இல்லக் கூடம்.

நேரம் : மாலை.

கதையுற்றோர் : வியாழனார், அரவிணையார்.

வியா : வாருங்கள் ஐயர்வாள்!

கேதா : ஆமாம், ஆமாம். திருமண அழைப்பிதழ் அச்சடித்து அனுப்பி இருக்கிறீர்கள். பார்த்தேன். காலம் கலி காலம். எல்லாம் தலைகீழாக மாறிப் போகிறது. வியாழம் பிள்ளைவாள் நான் திருமணத்துக்கு வர வேண்டாம் என்று நினைக்கிறேன்.

வியா : ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?

கேதா : திருமணத்திலே பாருங்கள், மணமகன் கதிரவன் என்று போட்டிருக்கிறது — அதாவது சூரியன் ஒரு கோள். மணமகள் நிறைமதி என்று போடப்பட்டிருக்கிறது. நிறைமதி என்றால் சந்திரன். அது ஒரு கோள். சூரியனும் சந்திரனுமாக இரண்டும் கூடுகின்றன. வெள்ளியம்பலம் தலைமையில் திருமணம் என்று போட்டிருக்கிறீர்கள். வெள்ளி என்றால் சுக்கிரன். மூன்றாயிற்று. மூன்று கோள்கள் கூடுகின்றன. இப்படிக்கு வியாழனார் என்று அடியில் போட்டிருக்கிறீர்கள். நீங்கள் திருமண மண்டபத்தில் இருப்பீர்கள். வியாழன் என்றால் குரு

நான்கு கோள்கள் கூடிவிடும். உங்கள மனைவி செவ்வாயி அம்மையாரும் உங்களோடு இருப்பார்கள். ஐந்து கோள் ஆகும். உங்கள் பிள்ளை இருக்கிறானே புதன், அவன் அங்கே, இங்கே ஓடுவான். ஆறு கோள்கள் ஆகும். தங்கள் மேலான வரவை எதிர்பார்க்கும் சனி என்று வேறு போட்டிருக்கிறீர்கள், ஏழு கோள்கள் ஆயிற்று. நானோ அரவிணையார்— இரட்டைப் பாம்பு அதாவது கேது. நானும் அங்கே வந்தால் எட்டுக் கோள்கள் ஆகிவிடும். எட்டுக் கோள்கள் — கிரகங்கள் கூடினால் எல்லாம் அழிந்து போகும். எட்டும் கூடினால் எல்லாம் அழியும். உலகமே அழியும் தெரியுமல்லவா? ஒவ்வொரு பக்கம் மாறிக் கிடக்க வேண்டிய எட்டுக் கோள்களும் ஒன்று கூடக் கூடாது. கூடினால், உலகமே அழியும் உயிர்கள் எல்லாம் அழியும் என்று சாத்திரம் கூறுகிறது. பெரியவாள் எல்லாம் சொல்லி யிருக்காள். அதற்குத்தான் சொன்னேன் நான் வரவேண்டாம் என்று.

*வியா :* அப்படி யெல்லாம் ஒன்றும் ஆகிவிடாது. எட்டு இருந்தாலும் ஏழுதான் எஞ்சும் வாருங்கள்.

(—திரை விழுகிறது—)

## எட்டாவது காட்சி

இடம் : மணவறை.

நேரம் : நண்பகல்.

கதையுற்றூர் : யாவரும்.

*வெள்ளி :* இப்போது மணமகன் கதிரவன். மணமகள் நிறைமதிக்கு மாலை சூட்டுவார். (கதிரவன் மாலை சூட்டல்) அது போலவே மணமகள் நிறைமதி மண மகன் கதிரவனுக்கு மாலை சூட்டுவார். (நிறைமதி மாலை சூட்டல்)

*அரவிணையார் :* வியாழம் பிள்ளை எட்டுக் கோள்களும் சேர்ந்திருக்கிறோமே ...... என்ன நடக்குமோ !

*வியா :* நடக்கப் போவதைப் பாரும். ஏன்டா சனி ! மாலையும் மாற்றியாகி விட்டது. ஒன்றும் ஆக வில்லையேடா !

*சனி :* தாலியும் கட்டட்டும் மாமா, அவசரப் படாதீர் கள்.

*வெள் :* இப்போது மணமகன் மணமகளுக்கு மங்கல நாண் அணிவிப்பார். (நாண் அணிவித்தல்)

*வியா :* அடே சனி ! இங்கே வா. குத்துக்கல் மாதிரி அப்படியே இருக்கிறானேடா !

சனி : மாமா! எனக்கும் வியப்பாகத்தான் இருக்கிறது! (சிந்தித்து) ஓ! காரணம் புரிகிறது மாமா.

வியா ; என்னடாப்பா அது?

சனி : மாமா! என்னுடைய சாத்திரப் பை இங்கே இருக்கிறது இல்லையா? அது மிகவும் மேன்மையான சாத்திரம். நிறைந்த மங்களம் அமைந்தது. அது இருக்கிற இடத்தில் தீமையே வராது. அது இந்த வீட்டில் இருப்பதால்தான் களங்கத்தாலே வேலை செல்ய முடியவில்லை. அதைத் தாருங்கள். அதை எடுத்துக் கொண்டு நான் போய்விடுகிறேன். அப்புறம் நடப்பதைப் பாருங்கள்.

வியா : அப்படியா ...... இதோ அதை எடுத்துக் கொண்டு வருகிறேன். (எடுத்து வந்து தருகிறார்).

சனி : மாமா நான் போய் வருகிறேன்.

கதி : மாமா! மன்னிக்க வேண்டும்' வீணைப் பதட்டப் படாதீர்கள். உங்கள் கருத்துப்படியே திருமணம் மங்கலமாக முடிந்து விட்டது. உங்கள் மாப்பிள்ளை சனி, இனி இந்தத பக்கம் தலை காட்டவே மாட்டான், சாத்திரப் பைக்காகத்தான் காத்துக் கிடந்தான். அது கிடைத்ததும் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடிப்போய் விட்டான். நடந்ததை மறந்து எங்களை வாழ்த்துங்கள்.

வியா : அவனும் சேர்ந்து எல்லாரும் போட்ட திட்டந்தானா சரி, சரி வாழ்ந்து தொலையுங்கள். வாழ்ந்து தொலையுங்கள்.

(—திரை விழுகிறது—)

# 2. மறதி மன்னன்

'மறதி யுடையார்க்குப் புகழ் பொருந்திய வாழ்க்கை இல்லை' என்றுரைத்த திருவள்ளுவர், 'இக்கருத்து உலகத்தில் எத்தகைய நூலினர்க்கும் முடிந்த முடிபானது' என்று முடித்தார். இப் பொல்லாங்கான மறதி முள்மரம் போன்ற பகை யாகும். இளமையிலேயே இம்முள்ளைக் கிள்ள வேண்டும். வளர விட்டால் தளர்வே வரும். இதனை நகைச்சுவை மெருகோடு தரும் நாடகம்.

## மறதியில் மலங்கிறேர்:

பெருமாள்: அறமன்ற நடுவர்.

மீனாட்சி: பெருமாளின் மனைவியார்.

அவதாரம்: பெருமாளின் மகன்.

ஆமையப்பன்: ஏவலன்.

கணக்கன்: நடுவரின் அணுக்க எழுத்தன்.

ஆபத்துச் சகாயன்: அடியாள்.

மற்றும்

அஞ்சல் ஊழியர், குற்றவாளிகள், வழக்குரைஞர்.

எங்கள் இயல்பும் :

விரும்பும் ஒப்பனையும் :

பெருமாள் ; நான் நாற்பத்தைந்து அகவையினன், மறதிக் குணத்தை வளர்த்துக் கொண்டவன். இல்லத்தில் பொன் இழை போட்ட வெண்பட்டை உடுப்பேன். முழுக்கைச் சட்டை அணிவேன், கையில் ஒரு கைத்துண்டு கொள்வேன். அற மன்றத்தில் அப்பதவிக்குரிய உடைகள் உடுப்பேன். உரிய முடி கொள்வேன். பிற நேரங்களில் வெள்ளைத் தலைப்பாகை சூடுவேன். எதிலும் பரபரப்போடிருப்பேன்.

ஆமையப்பன் ; நாற்பது அகவையுடைய நான் அறமன்ற ஏவலனுக்குரிய வெள்ளை முழுக்காற் சட்டை மாட்டி மேலே வெள்ளை முழுக் கோட்டின் பெரும் பொத்தான்களைக் கழுத்து இறுக்கமாகப் பொருத்திக் கொள்வேன். முழு முறுக்கு மீசை உடையவன். வெள்ளைத் துணியைச் சுற்று முறுக்கிப் பெரும் முண்டாசாகக் கட்டிக் கொள்வேன். எவ்வேலையையும் ஆமை ஊர்தலாய்ச் செய்வேன் என்பர்,

கணக்கன் : முப்பது அகவை உடைய நான் பழுப்புநிற முழுக்காற் சட்டை யணிந்து, முழுக்கை வெள்ளைச் சட்டை யணிந்து, செம்மைநிறக் கழுத்துக் கச்சை கட்டிக் கொள்வேன். நடுவே வகிர்ந்து தலையை ஒப்பனை செய்து கொள்வேன். அரை மீசையாக நறுக்கிக் கொள்வேன். கையில் மணிப்பொறி கட்டி ஒரு பொன் கணையாழி சூடுவேன். காலில் கருப்பு அடிபுதை யரணத்தை உரிய காலுறையுடன் அணிவேன். எதையும் இயல்பறிந்து செய்பவன் எனப் பெயர் பெற்றவன்.

*அவதாரம் :* பன்னிரண்டு அக்வையுடைய நான் இல்லத்தில் அரைக்காற் சட்டையும் வெளியிற் செல்லும் போது முழுக்காற் சட்டையும் அணிவேன். சட்டையின் முன்புறப் பகுதியை முதுகுப் புறத்தே வைத்து மேற்பொத்தான் ஒன்றை மட்டும் பொருத்துவேன். தலை முடியைச் சீவ மாட்டேன். நெற்றியில் நீண்ட சந்தனக் கோடிடுவேன். ஒன்றரைக் கண்ணமைப்பில் வலக்கண் விழித்துப் பார்த்தபடி யிருப்பேன். மூக்கில் கோணல் என்பர். முகம் நெளிந்து வளைந்திருக்கிறது என்று என்னை ஏளனம் செய்வர். உடம்பிலும் வளைவுகளுக்குக் குறைவில்லை என்பர். நெளிந்து கொண்டே நிற்பேன்; நடப்பேன். இப்படிப் புது அவதாரமாகப் பிறந்துள்ளேன் என்று கூறப்பட்டதே பெயராகி விட்டது.

*மீனாட்சி :* நாற்பது அகவை நிறைந்த நான் இல்லத்திலும் பட்டாடைகளே உடுப்பேன். சிவப்பு நிறத்தில் பச்சைப் பூப்போட்ட புடைவையை நாகரீகப் பாங்கில் கட்டிப் பச்சை நிறச் 'சாக்கெட்' போடுவேன். காதில் வெள்ளைத் தோடும் கழுத்தில் பெரும் பொன் வடங்களும் அணிந்து கைகளில் பொன் வளையல்கள் அணிவேன். விரல்களில் பல கணையாழிகள் அணிவேன். மஞ்சள் பூசிக் குளித்து, முகத்தில் சிவப்பு நிறக் குங்குமம் இடுவேன். எதையும் ஆய்ந்து, ஓய்ந்து சிந்தித்துப் பரபரப்பின்றிச் செய்வேன்.

*ஆபத்துச் சகாயன் :* நாற்பது அகவை யுடைய நான் கட்டுக் கோப்பான தடித்த உடம்பை உடையவன். கருப்பு நிறம் நறுக்கி விடப்பட்டுப் பரந்து விரிந்த தலைமுடியும், முழு முறுக்கு மீசையும் உடையவன். கழுத்தில் முடிகள் போட்ட கருப்புப் பட்டுக் கயிறும்,

தோளில் கருப்புக் கயிற்றில் வெள்ளித் தாயத்தும் கட்டி யிருப்பேன். சிறிதளவு பருத்த தொந்திக் கொப்பூழ்க்குக் கீழே கட்டம் போட்ட கைலியை உருட்டி விட்டுக்கட்டியிருப்பேன். இடுப்பில் மறைவாகச் சிறு 'பிச்சுவா' செருகி யிருபபேன். எவருக்கும் ஆபத்துக் காலத்தில் பணம் பெற்றுக்கொண்டு உதவுவேன்.

(—திரை விழுகிறது—)

# மறதி மன்னன்

## முதற் காட்சி

இடம்: வழக்கு மன்றம்.

நேரம்: முற்பகல்.

கதையுற்ருர்: நடுவர், ஏ. ம. பெருமாள், ஏவலன், ஆமையப்பன், அணுக்கச் செயலன் கணக்கன், வழக்கறிஞர்கள், குற்றவாளிகள்.

*[குற்றவாளிகள் வரிசையாக நிற்கின்றனர். வழக்கறிஞர்கள் அமர்ந்துள்ளனர். முன்னே ஏவலன் வர அறமன்ற நடுவர் வருகிருர். அமர்ந்துள்ளோர் எழுகின்றனர். நடுவர் அமர்ந்ததும் அமர்கின்றனர். நடுவர் தீர்ப்பினைப் படிக்கின்ருர்.]*

நடுவர்: 786 வது வழக்கின் தீர்ப்பு. முதற் குற்றவாளி கொலைகாரன் என முடிவாக்கப் பட்டதால் ஆயுள் தண்டனை விதிக்கப்படுகிருன்.

[முதல் குற்றவாளி கூண்டில் ஏற்றி இறக்கப் படுகிருன். அவன் முறைத்துப் பார்த்தவாறு செல்கிருன்.]

அற. ந.: மேற்படி வழக்கின் 3, 4, 5, 6, 24, 96 வது குற்றவாளிகள் தலைக்கு ஏழாண்டுக் கடுங்காவல்

தண்டனை விதிக்கப்படுகிறார்கள். மற்றையக் குற்றவாளிகளின் குற்றங்கள் தெளிவாக்கப்படாமையால் விடுதலை பெறுகிறார்கள். குற்ற வழக்குப் பிரிவு 37 – முதற் குற்றவாளிக்கு ஆயுள் தண்டனை; வழக்குப் பிரிவு 560 - முதற் குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை; வழக்குப் பிரிவு 26 - குற்றவாளிகள் ஐவருக்கும் தூக்குத் தண்டனை; வழக்குப் பிரிவு 986 குற்றவாளிகளில் முதற் குற்றவாளிக்கு ஆயுள் தண்டனை; இரண்டாவது, மூன்றாவது குற்றவாளிகளுக்குத் தூக்குத் தண்டனை.

[படிக்கப் படிக்கக் குற்றவாளிகள் கூண்டில் ஏற்றி இறக்கப்படுகின்றனர். சிலர் அழுகின்றனர்; சிலர் முறைத்துப் பார்த்துச் செல்கின்றனர்; ஒரு சிலர் ஓலமிட்டு அதிர்ச்சியை ஏற்படுத்திச் செல்கின்றனர்.]

(—திரை விழுகிறது—)

[திரைக்குப் பின் ஒலி மட்டும்......]

அற. ந.: 287வது முதல் குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை; இரண்டாவது குற்றவாளிக்கு ஆயுள் தண்டனை; மூன்றாவது குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை.

வழக்கின் முதல் குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை; 2 - வது குற்றவாளிக்கு ஆயுள் தண்டனை. வழக்கு தள்ளப்படுகிறது. யாவருக்கும் தூக்குத் தண்டனை. ஆயுள் தண்டனை — தூக்குத் தண்டனை — ஆயுள் தண்டனை — தூக்குத் தண்டனை — — ஆயுள் தண்டனை — தூக்குத் தண்டனை.

(—திரை விழுகிறது—)

## இரண்டாவது காட்சி

இடம்: வழக்கு மன்றத்தில் நடுவர் அறை.

நேரம்: நண்பகல்.

கதையுற்றோர்: நடுவர், பெருமாள், ஆமையப்பன் கணக்கன்.

பெருமாள்: மறந்தே போனேன், பால் அருந்த. அப்பப்பா! எவ்வளவு வேலை! என்னென்ன வழக்கு! எப்பேர்ப்பட்ட தீர்ப்புக்கள்! அட...அட...அட... வேறு ஒரு பயலாலும் இப்படிச் செய்ய முடியுமா என்ன? அதனாலே வியர்வையைத் துடைக்கவும் மறந்தே போனேன்.

ஆமையப்பன்: [விசிறி போட்டவாறே] ஆமாம்...? ஒரே தூக்குத் தண்டனை...... ஆயுள் தண்டனை...... தூக்குத் தண்டனை......தூக்குத் தண்டனை! ஒரே எம பெருமான் ஆட்சி மண்டபம் போலே இருந்தது.

பெரு: என்ன சொன்னாய்!

ஆமை: இல்லை ஐயா! வழக்கெல்லாம் உடனுக்குடன் தீர்ந்து போனதல்லவா? அதைத்தான் புராணப் பேச்சிலே சொன்னேன், எம பெருமான் ஆட்சி மண்டபம் என்று.

பெரு: ஏனடா ஆமையப்பா! உன்னைப் போன்றவனாடா நான்! என் பெயரென்னடா?

ஆமை: அதை நான் சொல்லக்கூடாதையா.

பெரு: ஆமாம்...ஆமாம்...ம...ற...ந்...தே...போனேன். என் பெயர் ஏ. எம். பெருமாள். அதாவது எ...ம... பெருமாள். எம பெருமாள் பெயருக்கேற்ற செயல்; சரி...மேலே வேலை இருக்கிறது எனக்கு...மறந்தே போனேனே. ஓய் கணக்கர்!

கணக்கன்: ஐயா.

பெரு: தீர்ப்பெல்லாம் எப்படி?

கண: என் வாயால் சொல்லக்கூடியதா என்ன?

பெரு: சொல் அப்படி!

கண: ஒன்றுமட்டும் பொருத்தமாக அமைந்திருந்தால், சிறிதளவாவது நேர்மையாக முடிந்திருக்கும்.

பெரு: என்ன அப்படிச் சொல்லி விட்டாய்?...ஓ... நடுவிலே ஒரு முறை பால் குடிக்க மறந்தே போனேன், அதைத்தானே சொல்கிறாய்?

கண: அதோடு வேறொன்றையும்தான் சொல்கிறேன்.

பெரு: ஆம்; ஆம்; இப்போது கோட்டைக் கழற்ற மறந்து விட்டேன்.

கண: இந்த மறதிக்கெல்லாம் முடி சூட்டியது போல ஒன்றை மறந்து விட்டீர்கள்.

பெரு: என்னப்பா அது?

கண: அதாவது வழக்குகளை யெல்லாம் வரிசையாக எழுதித் தண்டனைகளையும் நேர் நேராக எழுதும் பொழுது முதல் குற்றத் தண்டனையை எழுத மறந்து விட்டீர்கள். அதனாலே முதல் குற்றம் ஒன்றுமில்லாமலேயே ஆகிவிட்டது. இரண்டாவது வழக்கு விடுதலையாக வேண்டியது தூக்குத் தண்டனை. இப்படிச் சிறு சிறு மாறுதல்கள்.

பெரு : அப்படியா ? இங்கே கொண்டுவா பார்க்கலாம்.

[கணக்கர் வழக்குகள் எழுதப்பட்ட குறிப்புத்தாளைக் காட்ட பெருமாள் படித்து விட்டுப் பதற்றத்தோடு.]

ஆமாம் அப்பா மறந்தே போனேனே. இப்போது என்ன பண்ணுவது ?

கண : இதையும் மறந்து விட்டால் போகிறது.

பெரு : ஏனப்பா கணக்கா ! காலையில் வந்தாரே.

கண : கோவில் அறங் காவலர்.

பெரு : ஆமாமப்பா தன்னாலேயே விடுதலை கிடைக்கும் என்று சொன்னேனே ; அந்த வழக்கு என்ன ஆனது ?

கண : உம்...என்ன ஆயிற்று ! அது இந்த மறதியிலே அடிபட்டு ஆயுள் தண்டனை வாங்கி விட்டது.

பெரு : [மிகவும் பதற்றத்தோடு] ஆ...அப்படியா ? அவன் பொல்லாத பயலாயிற்றே அப்பா...

கண : அவனையும் மறந்து விட்டால் போகிறது.

பெரு ; என்னப்பா. போப்பா. அவன் மேலே போவானே அப்பா.

கண : போனால் நமக்கென்ன ?

பெரு : போனால் நமக்கென்னவா ? இந்த வழக்கு மேலே போனால் மேலே உள்ளவன் என்னைப் பற்றி என்ன நினைப்பான் ? அரசாங்கத்திற்கு இது தெரிந்தால் என் வேலை என்ன ஆகும்...?

கண : வேலை என்ன ஆகும்... வேலை... .உங்களை மறந்து போகும். அது கிடக்கிறது. உயிரே போக இருக்கும்போது வேலையா பெரிது ?

பெரு: என்ன... உயிரா... யார்... உன் உயிரையா சொல்கிருய்.

கண: என் உயிர் கிடக்கட்டும். அது போவதைப்பற்றி யார் கவலைப்படுவார்? தங்களது மேன்மைதங்கிய உயிரன்ருே பெரிது.

பெரு: (பதற்றத்தோடு) என்னப்பா...என் உயிரா... என்ன... என்ன... சொல்லப்பா?

கண: ஓகோ... நேற்று வழக்கு முடிவு கூறும்போது உங்கள் முன்னே வந்து விழுந்தவற்றையெல்லாம் மறந்து விட்டீர்கள் போல் இருக்கிறது. வழக்குப் பிரிவு 356 முதல் குற்றவாளி மொண மொணத்தது. அந்தக் கட்டைப் பயல் முறைத்துப் பார்த்தது. குற்றவாளிகளின் மாமன், மைத்துனன், அண்ணன், தம்பி இவர்களெல்லாம் வெளியே நின்று பேசிக் கொண்டது. இவற்றையெல்லாம் மறந்தே விட்டீர்கள் போல் இருக்கிறது.

பெரு: ஆமாமப்பா. மறந்தே போனேன். இப்போது தான் நினைவு வருகிறது. உம்... இதற்கெல்லாம் மனத்தைத் தளரவிடக்கூடாது. இப்படியெல்லாம் ஏதாவது வரும் என்றுதானே கைத்துப்பாக்கி வைத் திருக்கிறேன். மேலும் எனக்கு அந்த ஆபத்துச் சகாயத்தின் நட்பும் உண்டு. அவன் சரியான ஆள் கட்டுள்ள உடம்பு.... அவன் துணை... எனக்கு எஃகுக் கோட்டைப் போன்றது, தெரியுமா உனக்கு!

[ஆமை உள்ளே வருகிருன்]

கண: நானும் மறந்தே போனேன். அந்த ஆபத்துச் சகாயம் காலையிலே வழக்கு மன்றம் துவங்குவதற்கு முன்ஞலே வந்தான். இப்போது ஐயாவை பார்க்க முடியாது என்று சொன்னேன். அவன் போயிருப் பான் ஐயா.

பெரு: என்னப்பா. போ அப்பா அவனைக் கட்டாயம் தங்க வைத்திருக்க வேண்டாமா? என்ன செய்தாய் போ!

கண: இல்லை ஐயா, நாளைக் காலையிலே கட்டாயம் உங்களை வீட்டில் வந்து பார்ப்பதாகச் சொல்லி விட்டுத்தான் போனான்.

பெரு: அப்படியா! கட்டாயம் அவனை நாளைக்குப் பார்க்க வேண்டும். மறந்து விட்டு வேறு எங்கும் வெளியே போகக்கூடாது. அவனை எப்போதும் பக்கத்திலேயே வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும். நாளைக் காலையில்தானே வருகிறேன் என்று சொன்னான்? மறந்தாலும் மறந்து விடுவேன். ஒரு தாள் கொடு - குறித்து வைத்துக் கொள்கிறேன்.

[கணக்கர் தாள் கொடுக்க ஏதோ குறித்து வைக்கிறார்]

கண: மறந்துவிட்டு வேறு எதையாவது எழுதி விடாதீர்கள்.

பெரு: ஆமாமப்பா. நாளைக் காலை ஆபத்து வருவான் என்று எழுதி இருக்கிறேன்.

கண: நீங்களும் முன் கூட்டியே அமைப்பாகத்தான் ஏற்பாடுகள் எல்லாம் செய்கிறீர்கள். நல்ல ஆளைப் பிடித்தீர்கள் ஐயா! அதிகமான முன்னேற்பாடு தான் உங்களுக்கு.

பெரு: கணக்கா! என்னை என்ன வென்று நினைத்தாய்? ஏதோ சிறிதளவு மறதிக் குணமுண்டு. என் திறமையும், பெருமையும் எத்தகையன தெரியுமா?

[ஆமையும் வருகிறான்]

கணக்கர்: எங்கள் தாத்தா உயர் அற மன்றத் தலைமை நடுவர், அவருடைய தம்பி, மாநகராட்சி மேயர். அவர் மாமா 200 வேலி பெருநிலக் கிழார். அவர் தம்பி முதல் உலகப் போரிலே வானப் படைத் தலைவர். அவர் அண்ணன் பெரிய இலக்கியச் செம்மல். ஒரு முறை அவருக்கு 'நோபல்' பரிசுகூடக் கிடைக்க இருந்தது. என் பெரியப்பா...... அவர் பெரிய......மறந்தே போனேன்......நிரம்பப் பெரியவர். எங்கள் அப்பா அமைச்சர். எங்கள் அண்ணன் அயல் நாட்டுத் தூதுவர். என் நண்பன் பெரியசாமி பெரிய யோகி இப்படி......

ஆமை: (குறுக்கிட்டு) இதோ! நமது (நம்ப) அவதாரம் வருகிறதையா.

அவதாரம்: அப்பா! அப்பா!

[என்று கூப்பிட்டவாறு நெளிந்து கொண்டே வந்து நிற்கிறான். முன்னும் பின்னுமாக அவனுடைய சட்டை மாற்றிப் போடப்பட்டுள்ளது. பொத்தான்கள் பொருத்தப்படவில்லை]

கண: ஐயா! நம்ம குழந்தை அவதாரம் அருமையான குழந்தை.

பெரு: ஆமாம்... அப்படியேதான். அருமையான குழந்தை. எங்கள் செல்வமான குழந்தை.

ஆமை: ஆமாம். குழந்தையென்றாலும் இது போன்று கிடைக்க வேண்டுமே.

பெரு: நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன். மறந்தே போனேனே.

ஆமை: அதுதான் தங்கள் முன்னோர் பெருமையெல்லாம் சொல்லித் தங்கள் பெருமையை மட்டும்......?

பெரு: என் பெருமை என்னடா வேண்டி யிருக்கிறது. இவ்வளவு பேர் பெருமை எல்லாம் இருக்கும்போது எனக்கென்று ஒரு பெருமை ஏதுக்கடா ? அதற்குத் தான் ஒரு பெருமையையும் வைத்துக் கொள்ள வில்லை. அப்படியே பெருமை வந்தாலும் அதை யும் மறந்து விடுவேன்.

அவ: அப்பா ! அம்மாவிடம் மட்டும் ஒரு பெருமையும் என்னை நெருங்குவதில்லை என்று வீட்டில் சொல்லு வாயே அப்பா.

பெரு: அவதாரம். கண்ணே ! எங்கே கண்ணு வந்தாயடா ?

அவ: அப்பா ! நான் வந்து ...... நான் வந்து (உடலை நெளித்தவாறே) நான் நகருற மன்றத் தேர்த லிலே நிற்க வேண்டும் அப்பா !

பெரு: என்ன நகருகிற மன்றமா ?

ஆமை: ஆமாமைய்யா. நம் முனிசிபாலிடி அதுதான் நகராட்சி மன்றம். மிகவும் மெல்ல நகர்ந்து வேலை செய்கிறதல்லவா ? அதைத்தான் நமது தம்பி நகருற மன்றம் என்று சொல்கிறது. வேறு மாதிரி யாக மாற்றி நரக மன்றம் என்று சொல்லாமல் இந்த அளவோடாவது சொன்னதே.

அவ: பார்த்தாயா அப்பா ! நம்முடைய ஆமை கூட நகருற மன்றம் பற்றிச் சொல்கிறது.

பெரு: அப்படியா ! உனக்கது ஏனடா கண்ணே இப் போது ?

அவ: அடுத்த வீட்டு மணிப் பயல் இருக்கானே, அவ னுடைய அப்பா நிற்கப் போகிறாராம். அதைப் பெரிதாக வீராப்பாய்ப் பேசிக் கொண்டான். 'நானும் நிற்கிறேன் பாரடா' என்று சொல்லி

விட்டு வந்து இருக்கிறேனப்பா, நானும் நிற்க வேண்டுமப்பா.

பெரு: அவதாரம். அதெல்லாம் வேண்டாம். அதற்கெல்லாம் நல்ல எண்ணம், பொதுத் தொண்டு, திறமை இவற்றில் கொஞ்சமாவது வேண்டும்.

கண: நன்ருய்ச் சொன்னீர்கள். நமது தம்பி அவதாரத்துக்கு என்ன குறை? கை, கால், தலை, வயிறு, பேச்சு, முகம் எல்லாம் குறையாமலிருக்கும்போது நின்ருல் என்ன ஐயா? சும்மா நிற்கட்டும் ஐயா. வயதுதான் குறுக்கே நிற்கிறது. அதற்கும் சட்டத்திலே ஏதாவது இடுக்கு இருக்கிறதா என்று பார்த்து விட்டால் போகிறது. இல்லை பிறந்த நாளையே மாற்ற ஊர்க் கணக்கரை ஏற்பாடு செய்து விடுகிறேன் நான்.

பெரு: கண்ணு அவதாரம்! பார்த்தாயா! கணக்கு கிண்டல் பண்ணுகிறது. நீ போகலாம். நின்ருல் காலை வலிக்கும். நான் வருகிறேன், ஏய்! ஆமை, தம்பியைக் கொண்டு போய் விடு.

ஆமை: வாருங்கள் தம்பி அவதாரம். வாருங்கள் இப்படியே.

கண: தம்பீ! சட்டையை இப்படி .........

அவ: மாற்றிப் போட்டிருக்கிறேன். அதைத்தானே சொல்கிருய். ஆசிரியர் நெஞ்சு திறக்கக் கூடாதென்று சொல்லி இருக்கிருர். அதனுல்தான் இப்படிப் போட்டிருக்கிறேன்.

ஆமை: முதுகும் திறக்கக் கூடாது என்று சொல்வதற்கு முன்னே பொத்தானையும் போட்டுக் கொள்ளுங்கள்.

[ஆமை அவதாரத்தை அழைத்துச் செல்கிருன்]

பெரு : கணக்கா ! மறந்தே போனேனே !

கண : எதை ஐயா ?

பெரு : தீர்ப்பின்போது நடந்தவைகளைக் குறிப்பிட்டாயே.

கண : அதை ஏன் கேட்கிறீர்கள். அதை நினைத்தாலும் குலை நடுக்கமாக இருக்கிறது. அதன் பிறகு நடந்ததை நினைத்தாலும் ...... உயிர் நடுக்கமாக இருக்கிறது.

பெரு : என்ன அதன் பிறகு நடந்தது ?

கண : வெளியே குற்றவாளிகளுடைய மாமன், மைத்துனன், அண்ணன், தம்பி இவர்களெல்லாம் பேசிக்கொண்டதை நினைத்துச் சொன்னேன்.

பெரு : என்ன கணக்கா ! என்ன பேசிக் கொண்டார்கள் ? என் திறமையைப் பற்றித்தானே !

கண : அதைப் பற்றியும் பேசிக் கொண்டார்கள் வெட்ட வேண்டும் — கையை வாங்க வேண்டும் — நாக்கை அறுக்க வேண்டும் .........

ஆமை : (வெளியிலிருந்து உள்ளே வந்தவாறு) உம்... ஆளையே தீர்த்துக் கட்டுவானுமே .........? கட்டுவான் ; கட்டுவான். இந்த ஆமை உயிர் இருக்கிற வரைக்கும் ஐயாவிடம் எவனுவது நெருங்க முடியுமா ?

பெரு : என்னடா ஆமை! என்னப்பா கணக்கா ! இப்படியெல்லாம் பேசுகிறீர்களே ! என்ன நடந்தது ?

ஆமை : இல்லை ஐயா ! வெளியில் இரண்டு முரட்டுப் பயல்கள் தீர்ப்பு நேர்மையில்லையென்று சொல்லி, உங்களை வெட்டிவிட வேண்டும், குத்திவிட வேண்

டும் என்று பேசிக் கொண்டார்கள். நான் மறைந்து நின்று கொண்டே "யாரப்பா அது? போலீசு" என்று சத்தம் போட்டேன். அவ்வளவுதான் ஆட்கள் கம்பி ஆகி விட்டார்கள்.

பெரு: கணக்கா! ஆமை!

கண: இதற்கெல்லாம் நீங்கள் ஒன்றும் கவலைப்படாதீர்கள்.

பெரு: இருந்தாலும் நான் தற்காப்போடே இருந்தாக வேண்டும்.

ஆமை: அதற்குத்தான் துப்பாக்கி இருக்கிறதே ஐயா!

பெரு: ஆமாம்! கணக்கா எதற்கும் நீயும் எனக்குத் துணையாக என் கூடவே வா. நீ மிகவும் நல்ல அணுக்கச் செயலாளன். என் பதவி வாழ்க்கையிலே உன்னைப்போல் எனக்கொரு நல்ல செயலாளன் கிடைத்ததில்லை.

கண: அவ்வளவு அருமையாக புகழாதீர்கள். வந்து ......... ஐயா! ஒரு செய்தி. நாளைக்கு அரை நேரம் ஓய்வு வேண்டும் ஐயா!

பெரு: [தேள் கொட்டியவர் போல் எழுந்து] என்ன ......? என்ன கணக்கா? ...... ஓய்வு ...... விடுமுறை ......... என்ன நினைத்துக் கொண்டாய்? அரசாங்கத்திலே வேலை செய்ய வந்தாயா? ஓய்வு பெற வந்தாயா? நாட்டுக்கு உழைக்கிற வேலையப்பா இந்த வேலை. ஓய்வு பெறுவதற்குச் சம்பளம் தரவில்லை. நன்றாக மனத்திலே வைத்துக்கொள். வேலையை ஒதுக்கிவிட்டு ஓய்வு வாங்குவது என்பது அரசுக் குற்றம். சட்டப்படி அதற்குத் தண்டனைகூட உண்டு. உம் ...... ஓய்வாமே.

கண: ஐயா! கோபிக்கக் கூடாது. வேலை என் வேலை மட்டுமில்லை வழக்கு 53 தொடர்பாக மாயூரம் போய்வர வேண்டும் என்று நீங்களும் சொல்லி யிருந்தீர்கள். அதையும் அப்படியே பார்த்துவிட்டு வரலாமென்று நினைத்தேன். நீங்களும்தான் அதற் காக வரவேண்டும் என்று சொன்னீர்கள். இரு வரும் ஓய்வு போட்டுவிட்டுப் போகலாமென்று நினைத்தேன்......

பெரு: நானுமா ...... ஆமப்பா ... மறந்தே போனேன் ...... வழக்கு வேலையாகப் போகிறோமல்லவா? அதற்கு ஓய்வு போட வேண்டாமப்பா. அலுவலக வேலையிலே போய்க் கொள்ளலாமே.

கண: அப்படியா ஐயா! அப்போதே உங்களுக்கு ஏதோ மரச் சாமான் வாங்க வேண்டுமென்று சொன்னீர்களே! அதையும் பார்த்துக் கொள்ள லாம்.

பெரு: ஆமாமப்பா! மறந்தே போனேன். அந்த மர வணிகனுக்கு முன்னாலேயே ஒரு முடங்கல் அனுப்பி வைக்க வேண்டும். ஆமை முடங்கலைச் செம்மை யாக அனுப்பாது விட்டு விட்டாலும் 'விடுவான்' நானேஎல்லாம் செய்து அனுப்ப வேண்டும். நீ பார். இதை முன்னமேயே சொல்லாமல் என்னை வீணாக சினங்கொள்ள வைத்துத் தலைவலியை வேறு கிளப்பி விட்டாயே! ஆமை தலைவலித் தைலம் கொண்டு வா! கணக்கா! தாள் கொண்டு வா!

[ஆமை உள்ளே போகிறான். கணக்கன் தாள் தருகிறான். பெருமாள் அதில் எழுதுகிறார். ஆமை திரும்ப வந்து மருந்தைக் கொடுக்கிறான். பெரு மாள் அந்த மருந்தை வாங்கித் தடவிக் கொள் கிறார்.]

பெரு: ஆமை! அஞ்சல் எல்லாம் அப்படியே அடுக்கி எடுத்துப் போ. [மாயூரத்துக்கு எழுதியதை அனுப்பாமல் தன் நினைவுக்கு எழுதிய குறிப்பென்று, மறதியில் மயங்கி ...... அதை மட்டும் தனியே எடுத்துக் கொண்டு] ...... ஆ! இது என் நினைவுக்கு எழுதியதல்லவா? மறந்து விடுவேன் இருக்கட்டும்.

[ஆமை அஞ்சல்களைப் போட்டுவிட்டுத் திரும்புகிறான்.]

கண: ஐயா!

பெரு: நாளைக்கு ஏற்பாட்டோடு இருக்கிறாயா?

கண: இருக்கிறேனய்யா ......

ஆமை: தலையை வலிக்கிறது என்றீர்களே ஊருக்குப் போக முடியுமா ஐயா!

பெரு: ஆமாம் ...... ஊருக்குப் போகத்தான் முடியாது. மறந்தே போனேன்.

கண: வருகிறேனென்று எழுதி விட்டீர்களே.

பெரு: ஆமாமப்பா. அதையும் மறந்து போனேன் கட்டாயம் போய் ஆக வேண்டுமே ...... ஏய் ஆமை அஞ்சலை யெல்லாம் பெட்டியில் போட்டு விட்டாயா?

ஆமை: ஓ ... போட்டு விட்டேன் ஐயா! ஏன் என்று கேட்டால் என்னையே கொண்டுவர மாட்டேனா என்ன?

பெரு: அட மண்டு! நான்தான் எதையும் மறந்து போவேனே. சிறிது நேரம் காத்திருந்து கேட்டு விட்டுப் போகக் கூடாதா? இப்போது என்ன செய்வது?

ஆமை : ஐயா ! இந்தப் போக்கிலிப் பயல்கள் வேறே குத்துகிறேன், வெட்டுகிறேன் என்று சொல்லி இருக்கிறார்கள். இப்போது எதற்காக வெளியூர் போக வேண்டும் ?

பெரு : ஆமாமப்பா. எல்லாவற்றையும் வரிசையாக மறந்து கொண்டே போகிறேன். போகத்தான் கூடாது.

கண : அப்படியானால் முடிவு என்ன ஐயா ? அதையா வது மறக்காமே சொல்லுங்க.

பெரு : கணக்கா ! இதோ பார் ! தலைவலி, உயிர் வலி, இரண்டும் இருப்பதால் நாளைக்குப் பயணம் கிடையாது, மறு நாள் போவோம்.

ஆமை : ஐயா ! வீட்டுக்குப் போக வேண்டுமே !

பெரு : ஆமாம் ஆமை. நினைவு படுத்தினாய் மறந்து போனேன். [புறப்படுகிறார்]

(—திரை விழுகிறது—)

## மூன்றாவது காட்சி

இடம் : நடுவர் இல்லம்.

நேரம் : காலை.

கதையுற்றோர் : நடுவர், ஆமை, அவதாரம், அஞ்சல் ஊழியர்.

[நடுவர் வழக்கு மன்றத்திற்குப் புறப் பட்டுக் கொண்டிருக்கிறார். ஆமை நிற்கிறான். அவதாரம் படித்துக் கொண்டிருக்கிறான். அஞ் சல் ஊழியர் வருகிறார்.]

**அஞ்சல் ஊழியர் :** ஐயா, அஞ்சல்.

**பெரு :** ஆமை ! விரைவில் வாங்கு !

**அ. ஊ. :** [அஞ்சல்களை வரிசையாகக் கொடுத்துக் கொண்டே ஆமையிடம்.] அப்பா ஒரு பதிவுக் கட்டு வந்திருக்கிறது

**ஆமை :** [அஞ்சல்களை மேசையின் மேல் வைத்து விட்டு] ஒரு பதிவுக் கட்டு வந்திருக்கிறது கைச் சான்று போடுங்கள் ஐயா.

**பெரு :** என்னப்பா, பெரிய கட்டா யிருக்கிறது?

**அவதாரம் :** நகருகிற ஆட்சித் தேர்தல் பற்றிச் சட்டம் வருகிறதென்று சொன்னாயே அப்பா. அந்தச்

சட்டம்தான் கட்டாக வந்திருக்கிறது. இது தெரிய வில்லையே அப்பா உனக்கு !

பெரு : ஆமாம் இருக்கும். ஏய் ! ஆமை இங்கே கொண்டு வா.

[கொண்டு வந்து கொடுக்கக் கைச்சான்றிடுகிறார், ஆமை கட்டை வாங்க அவனிடமிருந்து அவதாரம் கட்டை வாங்கிக் கொள்கிறான்.]

அ. ஊ. : ஐயா, கட்டணம் செலுத்த வேண்டிய அஞ்சல் ஒன்று இருக்கிறது. அஞ்சல் தலை ஒட்டப்படாமல் அனுப்பப்பட்டுள்ளது.

பெரு : எந்த மறதிக்காரன் அப்படிச் செய்திருப்பான் அல்லது முரட்டு மடையன் செய்ததோ என்னவோ? நல்ல நாடப்பா இது. 1968 இலும் அஞ்சல் தலை ஒட்டாத அஞ்சல் வருகிறது. ஆமை ! வாங்கு அதை. எவ்வளவப்பா காசு.

அ. ஊ. : 25 காசு.

(ஆமை கொடுத்து வாங்குகிறான்)

அவ : அப்பா ! என்னப்பா எல்லோரும் 15 காசு கொடுத்து எழுதாத கவர் - இல்லை - இல்லை. அஞ்சல் உறை வாங்குவார்கள். நீ என்ன அப்பா 25 காசு கொடுத்து எழுதிய அஞ்சல் உறை வாங்குகிறாய் ?

பெரு : இங்கே கொண்டுவா அதை !

ஆமை : எதை ஐயா ... இந்த அஞ்சும் உறையைத் தானே.

பெரு : அது என்னடா அஞ்சும் உறை.

ஆமை : 25 காசு கொடுத்து வாங்குவது அஞ்சும் உறை தானே ஐயா ! உள்ளே என்ன அச்சுறுத்தல் இருக்கிறதோ என்னவோ ?

பெரு: அச்சுறுத்தலா! என்ன......என்ன ஆமாமப்பா ...ஆமாம். இருந்தாலும் இருக்கலாம். இப்போதெல்லாம் காலிப் பயல்கள் மொட்டை முடங்கல் எல்லாம் இப்படித்தான் அனுப்புகிறார்கள். அதைக் கொண்டு வா! என்னவோ ...... ஏதோ ...... உம்,

[கைகள் நடுங்க ......தடுமாற ...... உறையை குறுக்கே கிழிக்கிறார். உள்ளே யிருந்த தாளை எடுத்துச் சற்று நேரம் கூர்ந்து பார்த்துவிட்டு வரவரத் திகிலடைந்த மனத்தவராய் ......]

பெரு: ஆமை! [என்றலறியபடியே நாற்காலியில் சாய்கிறார்.]

ஆமை: என்ன ஐயா! ஐயா! ஐயோ! அவதாரம் இங்கே பார்! என்ன இப்படி ?- என்ன ஐயா ?

அவதாரம்: ஆமை! அம்மா வாங்கிய பட்டுப் புடவைகள் கைச்சாத்து வந்திருக்கும், அதுதான் அப்பா தூங்குகிறது. நீ உன் வேலையைப் பார். நான் படிக்க வேண்டும். [படிக்கிறான்] "ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்,"

பெரு: [தெளிவடைந்தவராய் விழித்து] ஏய் ஆமை! நான் எதிர்பார்த்த படியும் நீங்கள் சொன்னபடியும் ஆகி விட்டது.

ஆமை: என்ன ஐயா! செய்தியைச் சொல்லுங்கள் தளராதீர்கள்.

பெரு: "கட்டைப் பயல் முணுமுணுத்தான் — மாமன், மைத்துனன், அண்ணன், தம்பி — ஒரு கை பார்க்கிறேன் என்றான்" என்றெல்லாம் சொன்னீர்களே! அதற்குத் தகுந்தாற் போலேதான் இந்த முடங்கலும் வந்திருக்கிறது. அந்தக் காலிப் பயல்களிலே எவனோதான் ஏதோ திட்டம் போட்டிருக்கிறான்.

அவ : (படிக்கிருன்) "ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.''

பெரு : [முறைத்துப் பார்த்து விட்டு] ஊம் ...... என்ன திமிர் ?...அஞ்சல் தலையும் ஒட்டாமல் இப்படி எழுதி ...ஊம்...ஊம் ... ஆபத்து ... ஆபத்து.

ஆமை : என்ன ஐயா ! ஆபத்தா ! எதற்கையா ? உயிருக்கா ...? எதற்கு ஐயா ?

பெரு : ஆமாம் ஆமை ! எவனே நமது தலைக்குப் பாக்கு வைக்கிறேன் என்று எழுதி யிருக்கிருன். இன்றைக்கு என்ன தேதி ... பார் ?

ஆமை : பத்து ஐயா...

பெரு : ஆ ... பத்து ... ஆபத்தான நாள். இன்றைக்கு என்று குறிப்பிட்டுத்தான் எழுதி யிருக்கிருன். ஊம் ... என்ன செய்வது ? அதுவும் காலையில் என்று எழுதி யிருக்கிருன். இப்போது காலைதானே! மறந்தே போனேன்.

ஆமை : ஆமாம் ஐயா ! இது காலை நேரம்தான்.

பெரு : போ. கதவை யெல்லாம் மூடி வை. எல்லாக் கதவையும் மூடி வையடா. போடா போ.

அவ : (படிக்கிருன்) ''மாதாவை ஒரு நாளும் மறக்க வேண்டும்''

பெரு : ஆமாமடா ! ஆமை அவன் அம்மாவை மறந்தே போனேன். கூப்பிடு அம்மாவை. அவசரம் என்று கூப்பிடு. அவள் - ''ஐயா இப்படித்தான்" என்று இருந்து விடுவாள். 'ஆபத்து வந்தே விட்டது' என்று கூப்பிடு. கூப்பிடடா ? ஓடு ... கொல்லைக் கதவையும் மூடு.

அவ : அப்பா! படிக்கும்போது கூச்சல் போடக் கூடா தென்று மற்றவர்களுக் கெல்லாம் சொல்லிவிட்டு ... நீயே என் படிப்பைக் கெடுக்கிருயே அப்பா...... இரைச்சல் போடாதே அப்பா!

பெரு : கண்ணு! அவதாரம் எனக்கே ஆபத்து வந்திருக்கிறது. என்னைக் கவனிக்காமல் பேசுகிருயே?

அவ : நீதானே அப்பா படிக்கும்போது படிப்பிலேயே கவனம் இருக்க வேண்டும்; மற்றவற்றில் கவனம் கூடாதென்று சொல்லி யிருக்கிருய்.

பெரு : போன பயல் ஆமை வந்தாணு பார்!...... தட்டுக் கெட்ட பயல் எல்லாம் எனக்கு வந்து வாய்க்கிருன்.

அவ : (படிக்கிருன்) "போகவிட்டுப் புறஞ் சொல்லித் திரிய வேண்டாம்."

பெரு : ஏய்! ஆமை ஓடிவா!

ஆமை : இதோ! வந்து விட்டேன் ... என்ன செய்ய வேண்டும்?

பெரு : என்ன செய்ய வேண்டுமா?

ஆமை : ஆமாம் ஐயா!

பெரு : எங்கே அம்மா?

ஆமை : வருகிறேன் என்ருர்கள்.

பெரு : எங்கே கைத்துப்பாக்கி.

ஆமை : மேசைப் பெட்டிக்குள்ளே இருக்கிறது ஐயா!

பெரு : எங்கே திறவுகோல்?

ஆமை : உங்கள் பையிலே.

பெரு : பை எங்கே?

ஆமை : சட்டையில்.

பெரு : சரி, எங்கே கொலைகாரன் ?

ஆமை : தெருவிலே வந்து கொண்டிருக்க வேண்டும்.

பெரு : எல்லாம் மூடினுயா ?

ஆமை : கொல்லைக் கதவைத் தவிர மற்றவற்றை யெல்லாம் மூடி விட்டேன்.

பெரு : அதைத்தானடா முதலில் மூட வேண்டும். அதை ஏன் மூடவில்லை ?

ஆமை : சமையற்காரம்மா மூடக்கூடாதென்று சொல்கிருர்கள்.

பெரு : ஏனடா ?

ஆமை : நான் ஒன்றும் கொல்லை வழியாக அள்ளிக் கொண்டு போக மாட்டேன். அப்படி ஐயப்பட்டால் சமைக்க முடியாதென்று சொல்கிருர்கள்.

பெரு : ஏனடா ! என் உயிரை விட அது பெரிதாமோ ?

ஆமை : அந்த அம்மா அப்படித்தான் நினைக்கிருர்களோ என்னவோ ?

பெரு : கொலைகாரன் வந்து விடுவான் என்று சொன்னுயா ?

ஆமை : அதற்கென்ன ? அப்பளக் குழவி இருக்கிற தென்று சொல்கிருர்கள்.

பெரு : போடா. பெரிய வீராங்கனை அவள் ! போய்க் கதவை மூடடா

ஆமை : நான் போக மாட்டேனையா ... அந்த அம்மா முறைத்துப் பார்ப்பதே அச்சமாக இருக்கிறது. அந்த அம்மாவை வாசற் படியில் நிறுத்தி வைத்து விட்டால் துப்பாக்கிக் குண்டுகூட அந்த இடத்தைத்

தாண்டுவதற்குத் தயங்கும். அப்படி இருக்கிறது அவர்கள் விழி. நான் போகமாட்டேன் ஐயா!

பெரு: நீ போடா நான் சொல்கிறேன். இல்லாவிட்டால் இரண்டு பேரையும் வேலையை விட்டு நீக்கி விடுவேன்.

அவதாரம்: (படிக்கிருன்) "அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்"

பெரு: ஏய்! அவதாரம் என்னடா? ஏய்! ஆமை! அம்மா எங்கேடா, இன்னும் காணோம். நான் அந்த அறைக்குள்ளே போகட்டுமா?

அவதாரம்: [படிக்கிருன்] "போகாத இடந்தனிலே போக வேண்டாம்"

பெரு: ஆமாம் ... ஆமாம் ... நான் அந்த அறைக்குள்ளே போனதே இல்லைதான். அம்மா என்ன பண்ணுகிருள்? சீ! சொன்னையா?

அவ: [படிக்கிருன்] "நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டாம்"

ஆமை: தம்பி ... இதோ பார் ... சும்மா ...

பெரு: என்னடா போ! ... போய் அவளை ஐயாவுக்கு ஆபத்தென்று சொல்லிக் கூப்பிடடா? அவள் நேரத்திற்குத் தகுந்தாற்போலே ஏதாவது ஓசனை சொல்லுவாள் ... போடா.

[பெருமாள் கைத்துப்பாக்கியைச் சரி செய்து கொள்ளுகிருர்] எங்கேயடா...

ஆமை: வருவதற்காகப் புறப்பட நினைத்து விட்டார்கள்

பெரு: நல்ல மனைவி, நல்ல குழந்தை, நல்ல வேலைக்காரன், நல்ல குடும்பம்.

(அம்மையார் வருகிருர்)

வந்தாயா இப்போதாவது? ... எனக்குப் பெரிய ஆபத்து வந்துள்ளது.

அம்மையார்: எதற்கு ஆபத்து?

பெரு: என் உயிருக்கு!

அம்மையார்: உயிருக்குத்தானே! உடலுக்கு இல்லையே.

பெரு: என்ன அது?

அம்மை: ஓராயிரந்தடவை இது மாதிரி ஆபத்து வந்திருக்கிறதே. அது போன்ற ஆபத்துத்தானே என்றேன்.

பெரு: இது உண்மையான ஆபத்து.

அம்மையார்: உங்கள் உயிர் மிகவும் வலிமையானது. எந்த ஆபத்தும் ஏதும் செய்துவிடாது. பேசாமல் அறமன்றத்துக்குப் போய் வாருங்கள்.

அவ: [படிக்கிறான்] "அஞ்சாமல் தனி வழியே போக வேண்டாம்"

ஆமை: [உரத்த குரலில்] அவதாரம் அசட்டு வாயைத் திறக்க வேண்டாம்!

அவ: அப்பா! அப்பா! இங்கே பாரப்பா, என்னை அசடு என்கிறான் ஆமை.

பெரு: ஏய்! நானே கொலைகாரனாக மாறிவிடுவேன் போலிருக்கிறதே.

அம்மை: இது வரையில் யார் கொலைகாரன்?

பெரு: இதோ பார் மீனாட்சி! உனக்கு எல்லாம் ஏளனம்தான், இதைப் பார்! இப்படியொரு முடங்கல் வந்திருக்கிறது. படித்தால் ஒப்பாரியே வைத்து விடுவாய்.

மீனாட்சி : [வாங்கிப் படித்து விட்டுச் சிரித்தவாறே] இந்த எழுத்தைப் பார்த்தீர்களா ?

பெரு : எழுத்து அழகையா சுவைக்கச் சொன்னேன். கட்டிய கணவனுக்குச் சுருக்குக் கயிறு நெருங்கிக் கொண்டே இருக்கிறது. நீ என் மனைவி ! என் கழுத்தை அதற்குப் பக்குவப் படுத்துகிறாய் போலிருக்கிறது. எவனோ ஒரு கொலைகாரன் எழுதியதைச் சுவைக்கிறாயே !

மீனா : ஐயையோ ! சுவைக்க வில்லையே ! அதைப் பாருங்கள் ; எப்படி இருக்கிறது, என்றேன்.

பெரு: கொலைகார மடப்பயல் தற்குறியாகத்தான் இருப்பான். அவன் எழுத்து எப்படி இருக்கும், இப்படி இல்லாமல் ?

மீனா : அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்.

பெரு : சரி. இப்போது என்ன பண்ணுவது ?

மீனா : எதற்கு.

பெரு : இந்த ஆபத்திற்குத்தான்.

மீனா : ஓகோ ... ஆபத்திற்கா ? [சிரிக்கிறாள்]

பெரு : என்ன சிரிக்கிறாய் ?

மீனா : சிரிக்காமல் என்ன பண்ணுவது ? பூரிப்புக்கூட அடைய வேண்டும்.

பெரு : எதற்காக நான் சாகப்போகிறேன் என்பதற்காகவா ?

மீனா : ஆமா ... கொலை ... கொலை, யாரைச் செய்வார்கள் ? கொலை செய்யப்படும் பேறு பெரிய சான்றோர்களுக்குத்தான் கிடைக்கும். காந்தி கொலை செய்யப்பட்டார். பெரிய சான்றோராக இருந்ததி

ஞலேதான் கொன்ருன். கொன்ற பின்னர் புகழாக நிலேத்தார். ஏசுவைக்கொன்ருர்கள். நபியை ...சாக்கிரட்டீசை...இப்படிக் கொலே செய்யப்படுவது கிடைக்க வேண்டுமே. இப்போது என் கணவர் கொலே செய்யப்படுமளவிற்கு உயர்வாகி யிருப்பது ஒரு நல்ல மனேவிக்குப் பூரிப்புத்தானே! இது முன்ஞலேயே நடந்திருக்க வேண்டும்.

பெரு: என்ன என்ன? நான் முன்னேயே செத்திருக்க வேண்டும் என்கிருயா?

மீஞ: ஆமாம் நீங்கள் நீண்ட நாட்களாகவே நேர்மையாக நடந்து வருவதாகச் சொன்னீர்கள். இவ்வளவு நாள் விட்டு வைத்ததே உங்களே உணராமல் இருந்த குறையால் அல்லவா?

பெரு: மீஞட்சி! நீயும் என் பொறுமையைச் சோதிக்கிருய், ஏதாவது ஆகிவிட்டால் ... பிறகு உன் நிலேமையை எண்ணிப் பார் ... போ ... கதவையெல்லாம் மூடு ... போ.

மீஞ: எல்லாம் மூடியாகி விட்டது. புகை போக்கி ஒன்றுதான் மூடப்படவில்லே.

பெரு: மீண்டும் ஏளனமா?

மீஞ: எதைச் சொன்ஞலும் உங்களுக்குக் கிண்டலாகத்தான் படுகிறது. ஈ, கொசு வர முடியாமல் சாளரங்களே யெல்லாம் மூடிவிட்டுப் புகை போக்கியை மட்டும் திறந்து வைக்கலாமா? புகைபோக்கியில் ஓட்டையோ கொலேகாரன் இறங்கி வரும் அளவுக்கு அவ்வளவு பெரிதாக இருக்கிறது. அதஞலேதான் சொன்னேன்.

பெரு: ஆமாம். ஆமாம். மறந்தே போனேன். அதையுந்தான் மூட வேண்டும்.

மீனு: நன்றாக மறந்து போனீர்கள். ஒரு நாளைக்கு உங்களையே மறந்துவிடப் போகிறீர்கள். இப்போது எதை மறந்தீர்களோ; இவ்வளவு கூத்தும் நடக்கிறது.

பெரு: ஆமாம் அதைத்தான் மறந்து விட்டேன். எதை மறந்து விட்டேன்?

அவ: அப்பா! சட்டம் கட்டாக வந்திருக்கிறதே, அதைப் பிரித்துப் பார்க்க மறந்து விட்டாயே!

பெரு: ஆமாம்! ஆமாம்!

மீனு: என்னப்பா ஆமை அந்தக் கட்டு?

ஆமை: என்னவோ தெரியவில்லையம்மா.

மீனு: என்ன எடு பார்ப்போம்!

[ஆமை எடுக்கப் போகிறான்]

பெரு: ஏய் ஆமை! எடுக்காதே! ஆபத்தென்று அஞ்சல் — அதே நாளில் கட்டு! எடுக்காதே உள்ளே எதையாவது வைத்து எவனாவது அனுப்பியிருப்பான்.

ஆமை: எதை ஐயா வைக்கப் போகிறான்?

பெரு: ஏதாவது "வெடிகுண்டு" இருக்கும். நீயே எடு. இல்லை. இல்லை. எடுக்காதே. உடனே வெடித்தாலும் வெடிக்கும். போ. மீனாட்சி. ஒரு அண்டாவிலே தண்ணீர் கொண்டுவா. அதிலே இதைப் போடு. ஊற வை. பிறகு பார்க்கலாம்.

மீனு: ஆமை! ஐயா சொல்வதைக் கேள்.

பெரு: நான்! உன்னைச் செய்யச் சொன்னேன்.

மீனு: சரி, செய்கிறேன். அண்டாவிலே போடுவதைவிட கிணற்றிலேயே போட்டு விட்டாலென்ன?

பெரு: அதுவும் செய்யலாம். அப்படியே செய்யேன்.

மீனு: ஆமாம் உள்ளே வெடி குண்டு இல்லாமல் ஏதாவது பொருள் இருந்துவிட்டால் என்ன பண்ணுவது? வீணுகி விடுமே.

பெரு: என்ன மீனுட்சி உன் மூளே. எச்சரிக்கை செய்து அச்சுறுத்தி அஞ்சல் வந்தது மல்லாமல் இந்தக் கட்டும் வந்திருக்கிறது. அதற்குள்ளே வெடி குண்டு இருக்காது என்கிருயே. அதுனுள் வெடிகுண்டுதான் இருக்கிறது. என்னிடம் வைக்காதே. எடு! கொண்டு போ! ஓ மறந்தேன். காவல் நிலேயத்திற்குத் தொலே·பேசி மூலம் தெரிவி. உடனே போ.

மீனு: அப்படியா? நான் தெரிவித்து விடுகிறேன்.

பெரு: ஆமை! எல்லாக் கதவுகளும் மூடியாகிவிட்டதா?

ஆமை: ஆகிவிட்டது ஐயா!

பெரு: தப்பித் தவறிக் கதவைத் திறந்து விடாதே!

ஆமை: இல்லே ஐயா!

அவ: அப்பா! யாரோ க வைத் தட்டுகிற ஓசை கேட்கிறதப்பா.

பெரு: ஆ ... என்ன. ஆமாம். ஆமாம். கதவு தட்டும் ஓசைதான் கேட்கிறது. ஏய் ஆமை! திறக்காதே! மெதுவாகக் கதவு இடுக்கில் பார்! [கதவை இடிக்கும் ஓசை கேட்கிறது]

குரல்: ஐயா! ஐயா!

ஆமை: யாரோ வேண்டியவர்கள் குரல் மாதிரி இருக்கிறதே.

பெரு: அப்படித்தானடா இருக்கும். கொலே செய்ய வருபவன் "கொலே செய்ய வேண்டும் கதவைத்

திற" என்று சொந்தக் குரலிலேயா பேசுவான்? மடையா? திறந்து விடாதே! மீனாட்சி தொலை பேசி போட்டாயா?

மீனு: இதோ போட்டு விட்டேன்.

குரல்: ஐயா! ஐயா!
[கதவு உரமாகத் தட்டப்படுகிறது]

பெரு: ஆமை. நான் இந்த மூலையிலே மறைந்து நிற்கிறேன். இரு. இரு. துப்பாக்கியைச் சரி பார்த்துக் கொள்கிறேன். மெதுவாகத் திற! சுட்டே விடுகிறேன்.

[அவதாரம் தும்முகிறான்]

ஏய் தரித்திரம்! (ஆமையைப் பார்த்து) நீ திறடா. [ஆமை திறக்கவும் கணக்கன் வருகிறான். அவனை முறைத்துப் பார்த்துவிட்டு] நீயா ... சரி சரி ... கதவை உடனே மூடப்பா; உடனே மூடு.

ஆமை: ஆமாம் ... ஆமாம். மூடி விடுங்கள்.

பெரு: பார்த்தாயா கணக்கன்! நீ சொன்னது போலவே நடந்து விட்டது.

கண: என்ன ஐயா?

மீனு: [வந்து கொண்டே] அப்பா! நீயும் வந்து விட்டாயா? நீ என்ன ஆபத்தைக் கொண்டு வந்திருக்கிறாய்?

பெரு: இதோ பார் மீனாட்சி உன் மூடத்தனத்தைக் காட்டாதே,

" நுண்ணறிவுடையோர் நூலோடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே"

என்று தெரியாமலா சொன்னார்கள். பெண் புத்தி பின் புத்திதானே.

அவ : அப்பா,

" பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் — புவி
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள்ளே சில மூடர் — நல்ல
மாதர் அறிவைக் கெடுத்தார் "

— இந்தப் பாரதியார் பாட்டிற்குப் பொருள் சொல்லப்பா.

பெரு : அவதாரம் ! அதெல்லாம் அப்புறம்,

கண : என்ன ஐயா, இதெல்லாம் ... ?

பெரு : கணக்கா ! இந்த முடங்கலைப் படித்துப் பார்,
[பையிலிருந்து எடுக்கிறார். கதவு பலமாகத் தட்டப்படும் ஓசை கேட்கிறது.]

குரல் : ஐயா ! ஐயா !
[எல்லாரும் பார்க்கின்றனர், பெருமாள் துப்பாக்கியைச் சரி செய்து கொண்டே முடங்கலைப் பையில் போடுகிறார்.]

பெரு : ஆமை ... கணக்கா ... மீனாட்சி ... அவதாரம்... என்ன ஓசை அது ?

ஆமை : யாரோ கூப்பிடுகிறார்கள் ...

பெரு : கதவைத் திறககாதே ! மெதுவாக இடுக்கு வழியே பார் !

ஆமை : (பார்த்தவாறு) அடே அப்பா !

பெரு : என்ன ?

ஆமை : பெரிய உருவம்.

பெரு : உம் ...

ஆமை : கருப்பு நிறம்.

பெரு : கருப்பு.

மீனு: அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

ஆமை: வரிந்து கட்டி யிருக்கிறான்.

பெரு: எச்சரிக்கை மீனாட்சி இங்கேயே இரு.

மீனு: இருக்கிறேன் இதைப் பார்க்காமல் போவேனா என்ன? எனக்கும் பொழுது போக வில்லை யென்று இருந்தேன். சமையல்காரியையும் அழைத்து வந்தால் பார்ப்பாள்.

கண: அம்மா!

மீனு: சும்மா! இரு அப்பா!

பெரு: ஆமை மெதுவாக மேலே ஏறிப் பார்! இரு! இரு ... கைத்துப்பாக்கியைச் சரி பார்த்துக் கொள்கிறேன்.

ஆமை: (ஏறிப் பார்த்து விட்டு) சரியான நேரத்திலே வந்திருக்கிறான் ஐயா!

பெரு: சொல்லிய நேரத்திலேயே வந்திருக்கிறானா?

ஆமை: ஆமாம் ஐயா!

பெரு: ஆமாம். ஆமாம். எச்சரிக்கையாயிரு! சும்மா திற ... சுட்டுத் தள்ளி விடுகிறேன்.

ஆமை: வேண்டாம் ஐயா! உங்களுக்கு ஏன் கவலை?

பெரு: நீயே பார்த்துக் கொள்கிறேன் என்கிறாயா?
[ஆமை கதவைத் திறந்ததும் ஆபத்துச் சகாயன் வருகிறான். மீனாட்சி, அவதாரம், கணக்கன் யாவரும் சிரிக்கின்றனர்.]

பெரு: நீயா அப்பா? நல்ல சமயத்தில் வந்தாய் ...

ஆபத்துச் சகாயன்: நான்தான் கணக்கு ஐயாவிடம் நாளைக் காலையில் வருவேன் என்று சொல்லி வைத்திருந்தேனே ஐயா.

கண : நான்தான் அதைச் சொன்னேனே ஐயா!

பெரு : ஆமாம் !அப்பா! மறந்தே போனேன் ... உம் ... ஏய் ... ஆமை! கதவை மூடு ... சரி சரி வேண்டாம் ... ஆபத்துத்தான் வந்து விட்டதே!

மீனு : அப்பா! இப்போதாவது வந்ததே ஆபத்து.

அவ : அப்பா! ஓடி ஒளிந்து கொள் அப்பா. என்னப்பா? ஆபத்து வராதபோது அலறுவாய் ... முன்னாலேயே ஆபத்து இருக்கிறது ... பேசாமல் இருக்கிறாய் ... உனக்கு மிகவும் துணிச்சலப்பா.

பெரு : ஆமாமடா கண்ணு ! மறந்தே போனேன்.

கண : அப்போதே தாளில் குறித்து வைத்திருந்தீர்களே !

பெரு : ஆமாமப்பா! அதைப் பார்க்க மறந்தே போனேன். எங்கே அந்த மூடங்கல்?

ஆமை : உங்கள் பையிலே இருக்கிறதையா.

பெரு : (அதை யெடுத்து) ஆமாம் இதுதான் ... இது எப்படி அஞ்சலில் வந்தது.

மீனு : இதோ அது வந்த 'உறை'.

பெரு : கணக்கா! முகவரியைப் பார்!

கண : நீங்கள் மாயூரத்திற்கு மரக் கடைக்காக எழுதிய உறைதான் ஐயா.

பெரு : அதற்குள்ளே இது எப்படிப் போயிற்று? சரி தான் மரக் கடைக்கு எழுதியதை மேசையில் வைத்து விட்டு இதையே உறைக்குள் வைத்து அனுப்பி விட்டேன் போலிருக்கிறது. அது எப்படி இங்கே வந்தது?

கண : அஞ்சல் தலை ஒட்டப்படவில்லை.

பெரு: ஓ ... மறந்தே போனேன். நீ கொடுக்கவில்லை. நான் ஒட்டவில்லை.

கண: இல்லை ஐயா! நான் கொடுத்தேன்; நீங்கள் தான் ஒட்டவில்லை.

பெரு: அப்படியானால் அஞ்சல் தலை எங்கே போகும்?

அவ: அப்பா ... இதோ உன் தலைப்பாகையிலே ஒரு பதினைந்து காசு அஞ்சல் தலை இருக்கிறதப்பா;

பெரு: என்னடா? தலைப்பாகையில் அஞ்சல் தலையா? தலையில் வைக்கும் தலைப்பாகையில் அஞ்சல் தலை எப்படிப் போகும்?

அவ: தலையிலே தலை அப்பா.

மீனு: இனம் இனத்தோடு சேர்ந்திருக்கிறது.

ஆமை: இதோ இந்த உறையிலே தலைவலித் தைலவாடை அடிக்கிறதையா?

மீனு: சரிதான் கொஞ்சம் இடம் மாறிப் போய்விட்டது; அவ்வளவுதான்.

பெரு: ஆகா மறந்தே போனேன். தலைவலித் தைலத்தை உறையில் தடவி விட்டு அஞ்சல் தலையை நெற்றிப் பொறியிலே ஒட்டி விட்டேன். அது தலைப்பாகையிலே ஒட்டிக் கொண்டிருக்கிறது. மறந்தே போனேன்.

மீனு: நன்றாக மறந்து போனீர்கள். இதோ பாருங்கள் இப்படி மறந்தே போனேன் என்று அடிக்கடி சொல்லிச் சொல்லித்தான் மறதியிலேயே ஊறிப் போய் விட்டீர்கள். இப்படிச் சிறு பிள்ளையிலிருந்தே பழகி விட்டீர்கள்.

அவ: தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.

பெரு : ஏய் அவதார்ம் நான் மறந்தாலும் நீதான் தலைப்பாகையிலே இருக்கிறதென்று நினைவு படுத்தினால் என்னடா ?

அவ : மறந்தே போனேன் அப்பா !

மீனு : தம்பி கண்ணு ! அவதாரம் ! அப்படிச் சொல்லாதே நீயும் ! இப்போதுதான் நினைவு வந்ததென்று சொல் ! அப்பாவை அவர்கள் அம்மாவும் அப்பாவும் திருத்தாததுதான் இந்தக் குறை. பாரடா, அப்பா அறமன்ற நடுவர். பெரிய பதவி. வேலைக்காரனும் கணக்கரும், நீயும், நானும்கூட அப்பாவைப் பெரிய பதவியில் வைத்தா இப்போது நடந்து கொண்டோம். எல்லாம் 'மறதி' என்ற சொல்தான்.

பெரு : ஆமாம் மீனுட்சி மறந்தே போனேன் !

மீனு : பார்த்தீர்களா ! மறுபடியும் ...

பெரு : இல்லை நினைவு வந்து விட்டது. நான் சிறு பிள்ளையிலிருந்தே இஃப்படித்தான். படிக்கும் போதும் இப்படித்தான் ...

அவ : நினைவு வந்து விட்டதப்பா ! ஒரு கட்டைக் கிணற்றில் ஊறப் போட்டோமே.

பெரு : ஆமாம், மீனுட்சி, அது என்ன கட்டு கிணற்றிலேயே போட்டுவிட்டாயா ?

மீனு : இல்லை உங்களைப் பின்பற்றவில்லை. பிரித்துப் பார்த்துவிட்டேன். அவதாரத்தின் பிறந்த நாளுக்காக அவன் தாத்தா துணி, மிட்டாய் எல்லாம் கட்டி அனுப்பி யிருக்கிறுர்.

பெரு : ஆமாம் ... மறந் ... இல்லை. இப்போதுதான் நினைவு வருகிறது. நேற்று உன் அப்பா அனுப்பி

இருக்கிறேன் என்று எழுதி யிருந்தார். என்ன இருந்தாலும் மறதி மனிதனுக்கு ஒரு வகை இயற்கை.

மீரு : அது சரி நீங்கள் மறதியில் மனிதரில்லை. மறதியில் மன்னனுயிற்றே. 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்று ஆக்கி விடாமல் உங்கள் அலுவலர்கள், குழந்தை முதலிய இவர்களையாவது காப்பாற்றுங்கள்.

அவ : [உரத்த குரலில் படிக்கிருன்]
திருக்குறள், பொச்சாவாமை அதிகாரம்.

"அச்சம் உடையார்க் கரணில்லை; ஆங்கில்லை
* பொச்சாப் புடையார்க்கு நன்கு"

(—திரை விழுகிறது—)

* பொச்சாப்பு - மறதி.

# 3. அரசை ஆட்டிய அடிமை

'அளவறிந்து வாழாதவன் வாழ்க்கை படிப்படியே அழியும்' என்றார் திருவள்ளுவனார். இது குடும்பத்திற்கும் நாட்டிற்கும் பொருந்தும். குழந்தைப் பெருக்கம் பெரு நோய். அது பொருளியலை நசுக்கும் படை. இப்படையால் தாக்கப் பட்ட குடும்பம் நாடி தளர்ந்த நோயாளியாகும். ஓர் எளிய அடிமையும் அக்குடும்பத்தை ஆட்டிப் படைக்கக்கூடும். இக்கருத்தை மக்கட் பெருக்க முடைய அரசு ஒன்றை அடிப்படையாக வைத்து நகைச்சுவை கூட்டிக் காட்டும் நாடகம்.

## ஆட்டத்தில்
## அகப்பட்டோர் :

மாசப்பர் : பாலை நாட்டு மன்னர்

காசப்பர் : அமைச்சர்

கூசப்பர் : படைத் தலைவர்

வில்லப்பன் : நெய்தல் நாட்டு வேலப்பன்

குள்ளப்பர் : சிறை அலுவலர்

வாலன் : | காவல் ஏவலர்
தோலன் : |

குறிஞ்சிக் கோமான் : குறிஞ்சி நாட்டு மன்னர்

மற்றும்

பறையறைவோன், தூதுவன், வீரர், பொது மக்கள்.

எங்கள் இயல்பும் :

விரும்பும் ஒப்பனையும் :

*வாலப்பன் :* நாற்பது அகவையுடைய நான், பாலை நாட்டு அரசுக் காவல் ஊழியன். உடைகளிலும் அணிகளிலும் பாலை நாட்டுக்கென ஒரு மரபு உண்டு. காலை ஒட்டியபடி முழங்கால் வரை சிவப்பு நிறத்தில் வெள்ளைக் கோடிட்ட துணியாலான காற்சட்டை; முழங்கால் அடியிலிருந்து கணுக்கால் வரை மரப் பட்டை இறுகக் கட்டப்படும். காலில் பனை மட்டையாலான செருப்பு. உடம்பை மறைக்க மார்பிலும், தோள்களிலும் பழுப்பு நிறம் பூசிய மரப்பட்டைகள். இரு விரல் அகலமாய்ப் பழுப்பு நிறம் பூசிய மரப் பட்டையைத் தலையில் நெற்றி மேல் அளவில் சுற்றிக் கட்டிக் கொள்வோம். காதில் சிறு வளையமும் கைகளில் பெரு வளையமும் அணிவோம். மார்பில் எங்கள் குல தெய்வமாம் வீரனின் மார்பளவு வடிவம் பொறித்த அரக்கை அணிவோம்.

*தோலப்பன் :* நாற்பது அகவையுடைய நானும் பாலை நாட்டு அரசுக் காவல் ஊழியனே. வாலப்பனைப் போன்றே உடை, அணி, நடைமுறைகள் கொண்டவன்.

*வேலப்பன் - வில்லப்பன் :* முப்பத்தைந்து அகவையுடைய நான் நெய்தல் நாட்டு வணிகன். வணிகம் கருதிக் குறிஞ்சி நாட்டிற்குப் படகில் புறப்பட்ட நான் திசை தவறிப் பாலை நாட்டை அடைந்தேன். எங்கள் நாட்டு மரபுப்படி முழங்கால்வரை உப்பிய தாய்க் கீழே கணுக்கால் வரை ஒட்டியதான வெள்ளை நிறக் காற்சட்டை அணிந்து சுறுமீன் தோலைப் பட்டையாகக் காலில் கட்டிக்கொள்வேன்.

அத்தோலால் ஆகிய செருப்பணிவேன். இடுப்பி லும் கழுத்திலும் கைகளிலும் அதே வகைத் தோலை இறுக அணிவேன். உடம்பை மறைக்கக் கருமை நிறக் கம்பளிச் சட்டை முழுக்கையுடையதாக அணி வேன். தலைமுடி கழுத்துவரை தொங்கவிடப்பட்டு வெட்டப்பட்டிருக்கும். எப்பொழுதும் பழுப்பு நிறத் தோற்பை ஒன்று கையில் உண்டு. இந்த ஆடை களையும், அணிகலன்களையும் புரட்டி மாற்றி முன் பின்னாகவும் தலைப்பு மாற்றியும் அணிந்து அவ்வந் நாட்டுக்குரிய ஒப்பனைகளாகச் செய்து கொள் வேன். இவ்வாறு மாற்றிய ஒப்பனையே நான் வில்லப்பனாக மாறியபோது கொண்டதாகும்.

மாசப்பர் : ஐம்பத்தைந்து அகவை நிரம்பிய நான் பாலை நாட்டு மன்னன். எங்கள் நாட்டு மரபுப் படியே ஏவலனும் காவலனும் அணி, உடைகள் கொள்வோம். நான் மட்டும் அம்மரபுப்படியே முழுக்காற் சட்டையும், வெள்ளிப் பட்டங்கள் வைத்த அணிகளும் அணிவேன். தலையின்மேல் முழு முடியும் உச்சியில் எம் குல தெய்வத்தின் வெள்ளி உருவமும் சூடுவேன். வெள்ளி அணி கலன்கள் அணிவேன். கையில் எங்கள் மறை நூல் நீங்காதிருக்கும்.

காசப்பர் : ஐம்பத்தைந்து அகவையுடைய நான் பாலை நாட்டு அமைச்சன். எங்கள் நாட்டு மரபுக்கேற்ப கீழாடையும் மேற் கவசமும் அணிவேன். முழங்கா லுக்குக் கீழ் அமையும் ஆடையே அரசருக்கு அடுத்த பதவியிலுள்ளோர்க்கு உரியது. கீழே காற்பட்டை யணிவேன். தலையில் என் விரல் அகலம் வெள்ளி ஓரம் கட்டிய பட்டை முடி சூடி யிருப்பேன். முறுக்கிய மீசையுடையேன். நாட்

டிற்கும் மன்னருக்கும், குல தெய்வத்திற்கும் ஏற்ப நேரம், காலத்திற்குத் தக்கபடி நடந்து கொள் வேன்.

**கூசப்பர் :** நாற்பத்தைந்து அகவையுடைய நான் பாலை நாட்டுப் படைத் தலைவன். அமைச்சருக் குரிய தகுதிகள் படைத்த நான் அவரைப் போன்றே உடைகள் உடுப்பேன். மார்பில் குறுக்கே கட்டி விலாப் புறத்தே நீண்ட வாள் வைத் திருப்பேன். மார்பில் வெள்ளிப்பட்டை ஓரத்தில் ஓடிய கவசம் அணிந்திருப்பேன். அமைச்சர் வழியே ஒழுகுவேன்.

**குள்ளப்பன் :** அறுபது அகவை யடைந்த நான் பட்டறி வுடைய சிறை அலுவலன். படைத் தலைவருக்கு அடுத்த பதவியினன். உடைகள் யாவும் அவ்வாறே அமையினும் வெள்ளிக்கு மாறாகச் செம்புப் பட்டை கள் அமைந்த உடுப்புகள் அணிவேன். முடியில் துணி முண்டாசு சுற்றுவேன்.

**குறிஞ்சிக் கோமான்;** அறுபது அகவை யடைந்த நான் குறிஞ்சி நாட்டின் மன்னன். ஒட்டிய முழு காற்சட்டை. செம்மை நிறத்தது. மேலே முழுக் கைப் பசுமை நிறக் கோட்டு, சட்டை, அதன் மேல் கையில்லா நீலநிறக் கோட்டு. தோள் பட்டை கைப் பட்டை, இடுப்புப் பட்டை முதலியவை பொன் கலந்தவை. முடி முழுப் பொன்னால் ஆனது. குறிஞ்சிப் பூவின் பொன்னுருவை முடி யுச்சியிலும் மார்பிலும் சூடுவேன். எவற்கும் உதவவும், ஆய்ந்து முடிவெடுக்கவும் தயங்கேன்.

# அரசை ஆட்டிய அடிமை

## முதற் காட்சி

இடம் : பாலை நாட்டுக் கடற்கரை.

நேரம் : காலை.

கதையுற்றோர் : வாலப்பன், தோலப்பன், வேலன்.

*[வாலனும் தோலனும் தோள் மேல் கை போட்டவாறு பேசிக்கொண்டே வருகின்றனர்.]*

*வாலப்பன் :* நல்ல வேலையப்பா.

*தோலப்பன் :* ஆமாமப்பா,

*வா :* பெயர் மட்டும் அரசு அலுவல்.

*தோ :* சம்பளம் மட்டும் அரை வயிற்றுக்கு.

*வா :* அரை வயிற்றுக்கு ஏதப்பா? ஒரு நாளைக்கு ஒரு வேளைக்குக் கால் வயிற்றுக்குக் கிடைத்தால் போதாதா?

*தோ :* பாவம் என் வீட்டுக்காரி சோறு கண்டு இரண்டு நாளாகின்றன.

*வா :* ஆமாம் தோலா! உனக்கு எத்தனை பெண்டாட்டி? எத்தனை பிள்ளைகள்?

*தோ :* அது கிடக்கிறது போ. ஒரு பெண்டாட்டிக்கு 27 பிள்ளைகள் இருக்கின்றன. இன்னும் பெண்

டாட்டி இருந்தால் பள்ளிக்கூடம் வீட்டிலேயே வைக்க வேண்டியதுதான்!

வா: இந்த நாட்டிலே பள்ளிக்கூடம் வேறு வாழுகிறதோ? அது கிடக்கு போ, நீ கொடுத்து வைத்தவன். ஒரு பெண்டாட்டியோடு நிறுத்திக் கொண்டாய் எனக்கு ......

தோ: தெரியுமே! ஏழு பெண்டாட்டிகள்! பிள்ளை எத்தனை என்று கணக்கு உண்டா அப்பா?

வா: பெற்ற தாயார்களுக்கே தெரியாது; எனக்கெங்கேயப்பா தெரியும்? ஆமாம், நம் நாடு இப்படியே சாக்கடைப் புழுப் போலப் பெருத்துக் கொண்டே போனால் என்ன ஆகும்?

தோ: என்ன ஆகும்? எல்லாம் சாகும்?

வா: செத்தால்தான் தேவலையே. மக்கள் எண்ணிக்கை குறையுமே!

தோ: எமனாவது நம்ம நாட்டிலே ஒரு ஆண்டு கூடாரம் போட்டு முடிந்தவரை சாப்பிட்டுப் போனால் நல்லது.

வா: ஏதோ, கடவுள்தான் வர வேண்டும்' ஏய் தோலா, அதோ கடலைப் பாரடா! ஏதோ புதுப் படகு போலே இருக்கிறது,

தோ: படகும் இல்லே, ஒன்றுமில்லேயடா; அலை விளையாடுகிறதடா.

வா: சீ, சீ, படகுதான்; நன்றாகப் பார்!

தோ: நீயே நன்றாகப் பார்த்துச் சொல்!

வா: ஏடா. படகுதான்; ஏதோ உருவமும் தெரிகிறது. சர் என்று வருகிறதடா. அதற்குள்ளே அதோ வந்து விட்டது பாரடா...

தோ : ஆ! ஐயோ ஆமாமடா. வாடா ஓடியே போவோம். வீட்டுக்குள்ளே போய் படுத்துக் கொள்வோம்.

வா : சீ, சீ; அப்படி ஓடக்கூடாது. இரு பார்ப்போம்.

தோ : ஏண்டா நீ வரும்போது ஏழு பெண்டாட்டியிடமும் ஏழு பிடி வாய்க்கரிசி வாங்கி வாயிலே போட்டு வந்து விட்டாய்போல் இருக்கிறது; நீ நில்; நான் போகிறேன்.

வா : டேய் எங்கே போகிருய். இரு வருகிறேன். [இறுகப் பிடித்துக் கொள்கிருன். அதற்குள் படகு ஒன்று கரைக்கு வருகிறது. ஒரு புது ஆள் இறங்கி வருகிருன்]

தோ : வாலா, ஐயோ! இதோ வந்து விட்டானேடா! ...ஒன்றும் புரியவில்லையடா ...

வா : டேய், நமது நாட்டு ஆள் இல்லையடா. புது ஆளடா. என்னவெல்லாமோ கட்டி யிருக்கானடா.

தோ : டேய் போகாதே!

வந்தவன் : யார் நீங்கள்?

தோ : நாங்க, நாங்க...

வா : நாங்களா?

தோ : நாங்க ...

வா : இந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்.

வந்த : சரி அஞ்சாதீர்கள்! நான் ஒன்றும் செய்ய மாட்டேன். நான் கேட்பதைச் சொல்லுங்கள் போதும். இந்த நாட்டின் பெயரென்ன?

வா : பாலை நாடுங்க.

தோ : ஆமாங்க!

வந்த : பாலை நாடா? பாலை நாடு என்றால் வறண்ட நாடல்லவா?

தோ : பின் என்ன இது! வளம் கொழிக்கிற நாடோ!

வந்த : ஓ! அப்படியா? இங்கே எவ்வளவு மக்கள் இருப்பார்கள்?

வா : நல்ல கேள்வி கேட்டீர்கள்!

தோ : கேட்டீர்களா?

வா : அது எங்கள் மன்னருக்கே தெரியாதே. எங்களைக் கேட்டால் ...

தோ : எங்களைக் கேட்டாத் தெரியாதா என்ன?

வா : உனக்கு மட்டும் தெரியுமாடா?

தோ : ஓ தெரியுமே!

வந்த : நீ சொல்லு.

வா : அப்படிக் கேளுங்கள்!

தோ : கேட்டீர்களா ...! இதோ இவன் இருக்கிறானே இவனுக்கு ஏழு பெண்டாட்டி. பிள்ளைகள் எவ்வளவு என்று ஒரு பெண்டாட்டிக்கும் தெரியாது! ஒரு சாக்கடையிலே புழு எவ்வளவு இருக்கும்; அவ்வளவு இருக்கலாம்! இவன் போல எங்க தெருவிலே ஐம்பது அறுபது குடும்பம் இருக்கும். அது போல ஒரு ஊரிலே ஐம்பது அறுபது சேர்ந்தால் ஒரு நகரம். அது போன்ற நகரம் எத்தனையோ யாருக்குத் தெரியும்?

வா : டேய் தேய்விலையே, எப்படியோ சொல்லிவிட்டாயே!

வந்த : அவ்வாறானால், எண்ண முடியாத அவ்வளவு மக்கள் தொகையைக் கொண்டது உங்கள் நாடு. உங்களுக்கு மன்னர் உண்டா?

தோ: ஓ, உண்டே, அந்த இழவை ஏன் கேட்கிறீர்கள்?

வா: ஆமாங்க, உண்டு; எங்கள் மன்னர் மன்னாதி மன்னர்!

தோ: மறையாத வீரர்!

வா: வீராதி வீரர்!

தோ: வீங்கிய தோளர்!

வா: தீராதி தீரர்!

தோ: திரும்பாத தீரர்!

வந்த: பெயரைச் சொல்லுங்கள்!

வா: அப்படி இல்லீங்க முறைப்படி சொல்ல வேண்டும்.

தோ: உம் ... முறையைக் கண்டான். முறைப்படி சொல்ல வேண்டுமானால் அதிக நேரமாகும். அரசர் பெயர் மாசப்பர்!

வா: அமைச்சர் பெயர் காசப்பர்!

தோ: படைத் தலைவர் பெயர் கூசப்பர்!

வா: தலையாரி பெயர் ஏசப்பர்!

தோ: இவன் பெயர் வாலப்பன்.

வா: இவன் பெயர் தோலப்பன்.

தோ: உங்கள் பெயர் என்ன?

வே: வேலப்பன்.

தோ: ஆகா நிரம்பப் பொருத்தம்; நம்ம ஆளு தாண்டா! (என்று தோள்மேல் கை போடப் போகிறான்)

வே: ஏடா! ஒதுங்கி நில். துப்பாக்கி வெடித்துவிடும்.

வா: என்ன துப்பாக்கியா?

***தோ:*** அப்படி என்றால்?

***வே:*** அது தெரியாதா? (துப்பாக்கியைக் காட்டுகிறான்)

***தோ:*** இது என்னப்பா அடுப்பு ஊதுகிற குழாய்!

***வா:*** சீ, சீ, கோதுமையைக் குத்துகிற உலக்கையடா.

***வே:*** (சிரித்தவாறு) குழாயுமில்லை, உலக்கையுமில்லை. இதற்குள்ளே குண்டுகள் இருக்கின்றன. இந்தக் குதிரையை ...

***தோ:*** என்ன குதிரையா?

***வே:*** ஆமாம். குதிரையைத் தட்டினால் வெடிக்கும்; நெருப்பு வரும்; புகை வரும்; குண்டு பாயும்; உயிரைக் குடிக்கும்!

[வாலன், தோலன் அலறி ஓடுகிறார்கள்]

(—திரை விழுகிறது—)

## இரண்டாவது காட்சி

இடம் : அரச அவை.

நேரம் : நண்பகல்.

கலைதயுற்றோர் : மன்னன், அமைச்சன், படைத் தலைவன், வாலன், தோலன்.

*[சிரிப்பொலி கேட்கிறது. திரை உயர்கிறது.]*

*மன்னன் :* அமைச்சரே, நன்றாகச் சொன்னீர்! அது கிடக்கட்டும். நம் நாட்டு மக்கள் எண்ணிக்கை எவ்வளவு இருக்கும்?

*அமைச்சன் :* கணக்கெடுக்க முடியாத மக்கள் எண்ணிக்கை அரசே! ஒரு நாளைக்குப் பத்துக் குழந்தைகள் பிறக்கின்றன வென்றால் நான்கு கிழங்கட்டைகள் தான் இறக்கின்றன.

*படைத் தலைவன் :* இப்படி ஒரு நாளைக்கு நூற்றுக்கு அறுபது அளவில் மக்கள் எண்ணிக்கை பெருகும் போது எப்படிக் கணக்கெடுக்க முடியும்?

*மன்னன் :* மக்கள் வாழ்க்கையெல்லாம் எப்படி இருக்கிறது அமைச்சரே?

*அமை :* அதை எல்லாம் நான் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா மன்னா?

ப. த. : அப்படி ஒன்றும் அவர்கள் வளமாக வாழ வில்லை, அரசே!

மன் : அதுதான் கேட்டேன்.

ப. த. : ஒரு நாளைக்கு மக்களுக்கு ஒரு வேளைச் சாப் பாடு கிடைக்கும்.

மன் : ஆம். அப்படித்தான் இருக்க வேண்டும்?

அமை : பின் என்ன? இங்கு வளம் கொட்டித் தள்ளு கிறதோ?

மன் : புற்று ஈசல் போல மக்கள் கூட்டம் பெருகிக் கொண்டே போனுல் எவ்வளவு வளம் இருந்தாலும் அழிந்து போகுமே!

ப. த. : சரியாகச் சொன்னீர்கள், மன்னர் பெருமானே

மன் : அது சரி நம் பண்டாரத்தில் எவ்வளவு இருப்பு இருக்கும்?

அமை : இருப்பா? ஏறத்தாழ இருபதினுயிரம் பணம் இருக்கும். அன்றன்று வரி வரும், செலவாகும்.

மன் : அவ்வளவுதானு நம் பொருள் துறை?

ப. த. : நம்மிடம் பொருளும் இல்லை; துறையும் இல்லை!

அமை : மக்கள் பெருக்கம்தான் இருக்கிறது!

மன் : அடேயப்பா! கணக்கெடுக்க முடியாத மக்கள் இருக்கும்போது இந்த இருபது ஆயிரம் எந்த மூலை?

அமை : ஆம், அதை எடுக்காமல் அப்படியே சேர்த்து வைக்க வேண்டும்.

ப. த. : அதற்காகத்தான் வரியை நெருக்கி வாங்கி அன்றன்றைக்கே செலவழிக்கிறோம்.

[கூச்சல் போட்டவாறே வாலனும் தோலனும் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வருகின்றனர்.]

மன் : என்ன அங்கே கூச்சல்?

வா : செத்தோம்!

தோ : பிழைத்தோம்!

வா : தோ : எங்களைக் காப்பாற்ற வேண்டும் மன்னா!

மன் : என்ன நடந்தது? ஏன் இப்படி வந்தீர்கள்?

அமை : உங்களை எல்லை காக்க அல்லவா அனுப்பி வைத்திருந்தோம்!

தோ : எல்லை காத்தோம்.

வா : தொல்லை வந்தது.

மன் : கொல்லைக் காட்டு நரிகளே! இங்கு வந்து பல்லைக் காட்டவா உங்களை அனுப்பி வைத்தேன்?
[படைத் தலைவரைப் பார்த்து]
படைத் தலைவரே, உம் படை வீரருடைய வீரத்தைப் பார்த்தீரா?

ப. த. : ஏடா! வா இப்படி; என்ன நடந்தது?

தோ : போனோமா?...

வா : எல்லை இருந்தது.

தோ : இருந்ததா?...

வா : காத்துக் கொண்டிருந்தோம்.

தோ : காத்தோமா?...

வா : அவ்வளவுதான், விழுந்தோம்!

தோ : விழுந்தோமா? (கீழே விழுதல்)

ப. த. : டேய், என்ன விளையாடுகிறீர்கள்?

வா : எல்லையிலே போய்ப் பார்த்தால் தெரியும்!

தோ : நாங்கள் அங்கு எமனோடு விளையாடி விட்டு வந்திருக்கிறோம்.

அமை : என்ன நடந்தது? சொல்லுங்கள்?

வா : ஒரு ஆள்.

தோ : ஒரு குழாய்.

வா : ஒரு குதிரை.

தோ : ஒரு குண்டு. குழாயிலே இருக்குமென்று சொன்னார்.

வா : அதற்குத்தான் டுப்பாக்கி என்று பெயர் சொன்னார்.

தோ : சொன்ன பிறகு ...

வா. தோ. : வந்து விழுந்தோம்.

ப. த. : துப்பாக்கியா? அதற்குத்தான் இப்படிச் சொல்கிறீர்களா?

வா : ஆமாம்.

மன் : ஒரு துப்பாக்கி என்றால் அதிக விலை பெறுமே! நம்மிடம் ஒன்றுகூட இல்லையே!

ப. த. : நம்மிடம் பணம் இருந்தால்தானே வாங்கலாம்!

வா : அதுவும் சரிதான். சட்டியில் இருந்தால்தானே?

தோ : அகப்பையில் வரும்!

அமை : மன்னவா, நாம் இதைத் தந்திரமாக முடிக்க வேண்டும். இதைப் பொது மக்களுக்கு அறிவித்து, அவனைத் துப்பாக்கியோடு பிடித்துத் தருப வருக்கோ அல்லது அவனைக் கொன்று வருப வருக்கோ பரிசு தரப்படும் என அறிவிக்க வேண்டும்.

மன் : அமைச்சரே, நீர் சொன்னபடி பறை அடித்து அறிவியும் பார்ப்போம்.

(—திரை விழுகிறது—)

# மூன்றாவது காட்சி

இடம் : பொது இடம்.

நேரம் : மாலை.

கதையுற்றோர் : பறை அடிப்பவன், வாலன், தோலன், மக்கள்.

[பறை அடித்து முடித்தல்]

*பறையடிப்போன் :* இதனால் அறிவிப்பது என்னவென்றால் மன்னாதி மன்னர்.

*தோ :* மறையாத வீரர்.

*வா :* வீராதி வீரர்.

*தோ :* வீங்கிய தோளர்.

*வா :* தீராதி தீரர்.

*தோ :* திரும்பாத தீரர்.

*வா :* வேதப் புத்தகத்தை, வளைத்து மீனைப் பெரிய கையை விட்டு நீக்காமல், ஓதிக் கொண்டே இருக்கும் ஓங்கிய அறிவாளர்.

*தோ :* வரையறை இல்லாத மக்களை ஆளும்.

*வா :* மாசப்பப் பெரு மன்னர்.

*தோ :* இதனால்...

வா: எல்லா வகையான வீரர்களுக்கும்.

ஒருவன்: நிறுத்து எல்லா வகையான வீரர் என்றால் ...

வா: வழக்க வழக்கமாக பறை அடிக்கிறபோது இப்படித்தான் சொல்லிக் கொண்டு வருகிறோம், புதிதாக விளக்கம் கேட்கிறாயே.

தோ: உம்...

ஒருவன்: சொல்லாமல் அடிக்காதே. எல்லா வகையான வீரர் என்றால் ...

வா: எல்லா வகையான வீரர் என்றால் போர் வீரர்.

தோ: கேட்டாயா.

வா: புல் தடுக்கி வீரர்.

தோ: பேர் வீரர் அதாவது பேருக்கு வீரர்.

வா: இப்படிப் பல வகையான வீரர்களுக்கும் அறிவிக்கப்படுவது என்ன வென்றால் நமது நாட்டுக்குள் வேற்று நாட்டான் ஒருவன் குதிரை உள்ள டுப்பாக்கியை வைத்துக்கொண்டு புகுந்திருக்கிறான்.

தோ: புகுந்திருக்கிறானா? ...

வா: அவனைத் டுப்பாக்கியும் கையுமாகப் பிடித்துத் தருவோருக்கோ, அவனைக் கொன்று ...

தோ: தருவோருக்கோ.

வா: இரண்டாயிரம் பணம் பரிசு தரப்படும்.

ஒருவன்: முன் ஒரு முறை இப்படித்தான் சொன்னீர்கள். பிடித்துக் கொடுத்தோம். பணம் இல்லை என்றீர்கள்.

தோ: ஆம். உண்மையைச் சொன்னோம்.

ஒருவன் : இப்பொழுதும் அதே உண்மையைத்தான் சொல்வீர்கள்.

வா : சிறிது மாற்றிச் சொல்வோம்.

மற் : என்ன மாற்றம்.

தோ : பிடித்துக் கொடுத்துவிட்டுக் கேள் மாற்றத்தை.

வா ; அப்படிக் கேளு.

(பறை அடிக்கிறான்)

(—திரை விழுகிறது—)

## நான்காவது காட்சி

இடம் : அரசவை.

நேரம் : காலை.

கதையுற்றோர் : மன்னன், அமைச்சர், வில்லன் படைத் தலைவன்.

மன் : நமது குல தெய்வம் நமக்கு அருள் செய்திருக்கிறது !

அமை : மிக்க மகிழ்ச்சி அரசே ! எப்படிப்பட்ட அருள் அரசே ?

மன் : நம் மன மகிழ்ச்சிக் குரியதுதான். நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அதில் நம் குல தெய்வம் தோன்றி என்னை வாழ்த்தியது "உனக்கு நல்ல காலம் இருக்கிறது. பண்டாரச் சொத்தை மட்டும் கரைத்து விடாதே ! என்ன தவறு செய்தாலும் முறை மட்டும் தவறாதே ! மறைப் புத்தகத்தைப் படிப்பதை நிறுத்தாதே " என்று கூறி மறைந்தது.

அமை : நலமான வாழ்த்தைப் பெற்றுள்ளீர்கள், மன்னவரே !

ப. த. : ஆம். பண்டாரப் பொருள் அழியாமல், குறையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மன் : ஒரு காசும் குறையக் கூடாது.

அமை : அதே நேரத்தில் முறையும் தவறக் கூடாது.

மன் : ஆம், ஆம். இரண்டும் தவறாது காத்தாக வேண்டும்.

ப. த. : முறை என்று பார்த்துப் பணத்தைச் செலவு செய்யக் கூடாது.

மன் : ஆனால் முறை என்று பார்த்துப் பணத்தைப் பெருக்கலாம்,

அமை : இவ்வாறும் செய்ய வேண்டும். பண்டாரப் பணம் குறையாதபடி முறையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

மன் : ஆம். அப்பொழுதுதானே இரண்டு கொள்கை களையும் நடைமுறைப்படுத்த முடியும். இஃது இருக்கட்டும், அமைச்சரே! துப்பாக்கி வீரன் பற்றிய செய்தி ஏதும் உண்டா?

அமை : இதுவரை ஏதும் இல்லை.

ப. த. : அரசே! எவ்வாறாகிலும் அந்தத் துப்பாக் கியைக் கைப்பற்றிவிட வேண்டும்.

மன் : எவ்வாறாகிலும் என்றால், பண்டாரப் பணம் செல வாகாமல்தானே?

ப. த. : ஆம், மன்னவா!

மன் : மிக விரைவில் அந்தத் துப்பாக்கியைக் காண வேண்டும் நான். மிக ஆர்வம் உடையவனாக உள் ளேன். நாட்டு மக்கள் எல்லோரும் அறியுமாறு பறை அடித்தாகி விட்டதல்லவா?

ப. த. : ஆம், மன்னவா! நமது வாலப்பனும் தோலப் பனும் அதைச் செய்துள்ளார்கள்.

[வாலப்பன் வருகிறான்]

வா : மன்னாதி மன்னரே! மறையாத வீரரே!

மன் : செய்தியைச் சொல்.

வா : எவனோ ஒரு வீரன் தங்களை நாடி வந்துள்ளான்.

அமை : என்ன செய்தியாம்.

வா : மன்னரிடந்தான் சொல்ல வேண்டுமாம் எங்களிடம் சொல்ல மறுக்கிறான்,

மன் : இவ்வாறு தனி மனிதர்களையெல்லாம் நம்மை நேரே காண இசைவளிக்கக் கூடாது. ஏதும் நடக்கலாம்.

அமை : அரசே! எவரும் துப்பாக்கி வீரனைப் பிடித்துத் தர முன் வந்திருந்தால்...

மன் : இருக்கலாம். இருந்தாலும் ...

ப. த. : மன்னவரே, நானே சென்று ஆளை அறிந்து அழைத்து வருகிறேன்.

மன் : அதுதான் சரி, படைத் தலைவரே நீரே செல்லும்!

(படைத் தலைவர் செல்கிறார்)

மன் : மாசப்பரே! அந்தத் துப்பாக்கி வீரன் வந்திருப்பானோ?

அமை : இருக்காது மன்னவா, அவ்வாறிருந்தாலும் நல்லதுதானே? ஆளை மயக்கித் துப்பாக்கியைக் கைப்பற்ற ஆவன செய்யலாம்.

[ஒரு வீரனுடன் படைத் தலைவர் வருகிறார்]

ப. த. : மன்னவா! இந்த வீரன் துப்பாக்கி வீரனைப் பற்றிய தொடர்பாகத் தங்களைக் காணவந்துள்ளான்

மன் : அப்படியா? என்ன செய்தி சொல்? (வந்த வீரன்) அரசே! துப்பாக்கி வீரன் ஒருவன் நம்

நாட்டில் புகுந்து உள்ளதாக அறிந்தேன். அவனைத் துப்பாக்கியோடு பிடித்தோ அல்லது கொன்றோ வரலாம் என்று விரும்புகிறேன்.

மன் : அப்படியா? மகிழ்ந்தோம். செய்வதற்குரிய தகுதி உனக்கு இருக்கிறதா? என்று தான் அறிய வேண்டும், அமைச்சர் கேட்கும் வினாக்களுக்கு விடை சொல்.

வந்த : அமைச்சரே! வணங்குகிறேன்.

அமை : வணக்கம். உன் பெயர்?

வந்த : வில்லப்பன்.

அமை : அப்படியானால் நீ எந்த நாட்டவன்?

வில் : இந்நாட்டவன்தான். அமைச்சர் பெருந்தகையே. அதனால்தான் அப்பன் என்ற பெயரைப் பெற்றுள்ளேன்!

அமை : வில் என்ற பெயரை இந்நாட்டவர் வைத்துக் கொள்வதில்லையே!

வில் : நான் பிறவியில் நெய்தல் நாட்டவன். இந்த நாட்டுக்கு வந்திறங்கியவன்.

மன் : (அச்சத்துடன்) என்ன? வந்து இறங்கியவனா? எப்பொழுது வந்து இறங்கினாய்?

வில் : ஆம் பெரியோய்! பல்லாண்டுகளாயின. ஆனாலும் இந்நாட்டவனாகி விட்டேன். நம் அரசரின் குடிமகனாகி விட்டேன். மன்னவர் ஆணைக்கு முன் நாயாய் உழைப்பவன்.

மன் : அப்படியா?

அமை : அப்படியானால் நம் நாட்டு மன்னரது ஆணைக்குத் தலை வணங்குபவன்தானே நீ? மகிழ்ச்சி அந்தத் துப்பாக்கி வீரனைப் பிடித்து வரமுடியுமா?

அவனிருக்கும் இடம் தெரியுமா? அவனைப் பார்த்திருக்கிறாயா?

வில் : ஒன்றும் தெரியாது. ஆனால் அவனைப் பிடித்துக் கொண்டு வர முடியும்!

மன் : சரியான துணிவு உள்ளவன் நீ ........ நெய்தல் நாட்டு வீரர்களே துணிவு உள்ளவர்கள் தான்.

ப. த. : வில்லப்பா! அவனைப் பற்றிக் கவலை யில்லை துப்பாக்கியை மட்டும் உறுதியோடு ......

அமை : அப்படியில்லை. அவனையும் துப்பாக்கியுடன் ...

மன் : இல்லை ... அவன் ஏன் நமக்கு? அவனை இங்குக் கொண்டு வராமலே ... கொன்று விடலாம். துப்பாக்கி ... அவன் அறிகுறி. அஃது இங்கு வந்து சேர வேண்டும்.

அமை : அதுவும் சரிதான். உன்னால் முடியுமா?

வில் : மன்னர் பெருந்தகையின் அருளால் பிடித்துவிடுவேன் என்றே நம்புகிறேன்.

மன் : அப்படியே போ. வெற்றியுடன் வா ...

வில் : அரசர் தெய்வமே? பரிசு!...

மன் : ஆம். உண்டு.

அமை : அது பிறகல்லவா? இப்பொழுது என்ன?

வில் : அதுவும் தெரிந்தால் ஊக்கம் அதிகமாகும்.

மன் : உண்மைதான். இரண்டாயிரம் பணம் பரிசு!

வில் : மன்னர் தலைவா! நான் உறுதியுடன் செல்லலாம் அல்லவா?

ப. த. : ஏடா ... என்ன அவ்வாறு கேட்டாய்?

வில் : இல்லை. முன்னொரு முறை ...

அமை : அது வேறு. இது வேறு. நீ வேற்று நாட்டான் என்பதைக் காட்டி விட்டாய். நீ மன்னரை நம்புகிருயா, ஊர்ப் பேச்சை நம்புகிருயா ?

வில் : எதை நம்பச் சொல்கிறீர்கள் ?

மன் : என் பேச்சை நம்பு !

வில் : அந்த நம்பிக்கையோடு வணங்குகிறேன். விடை தருக!

மன் : போ. வெற்றியுடன் வா !

வில் : பரிசு பெற உறுதியாக வருவேன் ; போகிறேன்.

[செல்கிருன்]

மன் : காசப்பரே ! ஆள் அழுத்தமானவனுய்த் தென்படுகிருனே !

ப. த. : அவன் செல்வதைப் பார்த்தால் உறுதியும் தெரிகிறது. இரக்கமும் தோன்றுகிறது.

மன் : ஏன் அப்படிச் சொல்கிறீர் ?

அமை : எமன் வாய்க்கல்லவா செல்கிருன் !

ப. த. : எமன் வாய்க்குச் செல்பவனுக்கு ஆசையைப் பாருங்கள் ! பரிசு வேண்டுமாம், பரிசு !

மன் : பார்ப்போம் என்ன ஆகிறது என்று ; நமக்குத் துப்பாக்கிதானே வேண்டும் ?

அமை : பரிசுக்குப் பணம் அரசே ?

ப. த. : அரசாங்கப் பண்டாரத்திலிருந்து எடுக்கக் கூடாது !

அமை : சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டுமே, முறை என்ன ஆவது ?

மன் : பணம் குறையாமல்தானே காப்பாற்ற வேண்டும். அதற்கேற்றபடி முறையை மாற்றிக் கொள்ளலாம்.

(—திரை விழுகிறது—)

## ஐந்தாவது காட்சி

இடம் : அரசவை.

நேரம் : பிற்பகல்

கதையுற்றோர் : மன்னர், அமைச்சர், படைத் தலைவன், வில்லப்பன், வாலப்பன், குள்ளப்பன்:

அமைச்சர் : அரசே ! நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம். நேரத்திற்குத் தகுந்தபடி எல்லாவற்றையும் நாம் சரி செய்து கொள்வோம்.

மன்னர் : காசப்பரே ! நீர்தான் தக்கவாறு செய்ய வேண்டும்.

[வாலப்பன் வருகிறான்]

வாலப்பன் : மன்னாதி மன்னரே ...

மன் : செய்தியைச் சொல்.

வா : துப்பாக்கியுடன் வில்லப்பன் வந்திருக்கிறான்.

மன் : அப்படியா ! கூசப்பரே, நீர் சென்று அழைத்து வாரும்.

[படைத் தலைவர் கூசப்பர் செல்கிறார்]

மன் : (அமைச்சரைப் பார்த்து) காசப்பரே ! வந்து விட்டானே !

அமை : வந்தால் என்ன ? துப்பாக்கி யல்லவா கிடைக்கப் போகிறது.

மன் : பரிசு தர வேண்டுமே!

அமை : அதை யெல்லாம் பார்த்துக் கொள்வோம். தாங்கள் மட்டும் அடிக்கடி நம் நாட்டுச் சட்ட திட்டங்களைக் கேட்பதுபோல் என் கருத்தைக் கேட்டுக் கொள்ளுங்கள் போதும். நான் பார்த்துக் கொள்கிறேன்.

[படைத் தலைவன் — வில்லப்பனை அழைத்து வருகிறான். வில்லப்பன் துப்பாக்கி யுடன் வருகிறான்]

வில் : மன்னாதி மன்னவா! வணங்குகிறேன்.

மன் : வாழ்க! நீ வெற்றியுடன் வந்திருப்பதைக் கண்டு யாம் மகிழ்கிறோம்,

ப. த. : வில்லப்பா! துப்பாக்கியை எப்படிப் பெற்றாய்? துப்பாக்கி வீரன் என்ன ஆனான்?

வில் : மன்னவா! உயிரைப பணயம் வைத்து இச் செயலைச் செய்திருக்கிறேன்.

அமை : நல்லது. மகிழ்ச்சி. செய்தியைச் சொல்.

வில் : அருள் ஏறே! கடற்கரைப் பக்கமாய்த் திரிந்து கொண்டிருந்தேன். அவனைக் கடலில் கண்டேன். நான் அவனைப் போலவே உடை யணிந்து சென்றேன். என்னைக் கண்டதும் கரைக்கு வந்தான். ஆனாலும் என்னை வேற்று ஆள் எனத் தெரிந்து கொண்டான். மிக நயமாகத் துப்பாக்கியை அவனிட மிருந்து கைப்பற்றினேன். சுட முயன்றேன் ஓடினான். கடலில் மூழ்கினான். குறிக்குத் தப்பி மூழ்கி மூழ்கி மறைந்தான். மிதந்து போய்ப் படகு ஒன்றில் ஏற முயன்றான். சுட்டேன் குறி பார்த்து; கடலில் மூழ்கி விட்டான். நேரே துப்பாக்கியுடன் இங்கு வருகிறேன்.

மன் : மகிழ்ச்சி! மகிழ்ச்சி!!

அமை : வில்லப்பா, மிக்க மகிழ்ச்சி! துப்பாக்கியை மன்னர் பெருமானிடம் காணிக்கையாக வை.

வில் : பரிசு மன்னவா ?

ப. த. : ஏன் பறக்கிறாய்? பரிசு பறிபோய் விடுமா என்ன? அரசவை தெரிந்து பழகத் தெரிய வில்லையே உனக்கு.

வில் : இல்லை, என் ஆர்வம் இவ்வாறு கேட்கத் தூண்டி யது.

மன் : அது சரி ...ஆர்வம் இருக்காதா என்ன? அமைச் சரே! பரிசு பற்றி நம் நாட்டுச் சட்டம் என்ன சொல்கிறது?

அமை : மன்னவா! அறிவித்த பரிசை அவையைக் கூட்டிக் கொடுக்க வேண்டும். பல் வகை வீரர் களும் பரிசு பெறும் வீரனைத் தூக்கி நிற்க வேண் டும் ; மன்னர் தன் கையால் மாலை அணிவித்து பரிசைத் தர வேண்டும்.

மன் : நாளையே அவையைக் கூட்டுக. கூசப்பரே தேர்ந்த வீரர்களோடு தக்க ஏற்பாடு செய்க.

ப. த. : அப்படியே மன்னவா!

அமை : திரு. வில்லப்பர் அவர்களே! துப்பாக்கியை மன்னர் சமூகத்திடம் ஒப்படையுங்கள் ...

மன் : துப்பாக்கி வெடிக்கும் நிலையிலா உள்ளது ?

வில் : மருந்து உள்ளது. ஆனால் வெடிக்கும் நிலையில் இல்லை.

ப. த. : நல்லது கொடு.

[துப்பாக்கி மன்னனிடம் கொடுக்கப்படு கிறது.]

மன் : மிக்க மகிழ்ச்சி. நீயே நெய்தல் நாட்டு வீரன். படைத்தலைவரே! எல்லா வகைச் சிறப்புக்களுடனும் வில்லப்பர் நம் விருந்தினர் மாளிகையில் தங்க ஏற்பாடு செய்க. அமைச்சரே! நம் நாட்டுச் சட்டம் என்ன சொல்கிறது ?

அமை : பரிசு பெற இருக்கும் வீரனை வீரர்களே தூக்கிச் செல்ல வேண்டும். அவரை நடக்கவிடக் கூடாது என்கிறது நாட்டுச் சட்டம்.

மன் : கூசப்பரே! தக்க ஏற்பாடு செய்க.

ப. த. : நன்று மன்னவா.

[உள்ளே போய் நான்கு வீரர்களை அழைத்து வருகிறார்]

மன் : வீரர்காள்!

அமை : இவரை ......

[உடன் படைத் தலைவரும் நாட்டு வீரர் களும் வில்லப்பனை கட்டிப் பிடித்துக் கொள் கிறார்கள்.]

வில் : மன்னர் பெருந்தகையே! இங்கு நடப்பவற்றைக் கண்டு நான் ஐயப்படுகிறேன். அரசர் அறிவிப்பை ஏற்று முடித்துத் தந்த என்னை நீங்கள் மதிக்கக்கூட வேண்டாம், உரிய பரிசைத் தந்தால் போதும். அரசாங்க ஆணையை மேற் கொண்டு முடிப்பதற்காக ஒரு உயிரையே கொன்றிருக்கிறேன்.

அமை ; மன்னவரே !...

மன் : உம் ......... உயிரைக் கொன்றிருக்கிறாயா ? அமைச்சரே ! கொலையைப் பற்றி நம் நாட்டுச் சட்டம் என்ன சொல்கிறது ?

அமை : நம் நாட்டு மண்ணில் கொலை செய்தால் கொலை செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை. எல்லையோரத்தில் கொலை செய்தால் ஆயுள் தண்டனை.

ப. த. : இந்த வில்லப்பர் எல்லையோரத்தில் கொலை செய்திருக்கிறார்.

மன் : அப்படியானால் நம் குல தெய்வத்தின் சொற்களைக் காப்பாற்றும் வகையில் இந்த வில்லப்பனுக்கு ஆயுள் தண்டனையைக் கொடுக்கிறேன்.

வில் : என்ன இது முறை கேடு ?......அந்தச் சட்டம் உங்கள் சட்டம். இதில் குல தெய்வத்தை வேறு இழுத்துக் கொள்கிறீர்களா ? உங்கள் ஆணையை நிறைவேற்றியவனுக்கு ஆயுள் வரை சிறைதான் பரிசா ?

அமை : சிறை என்றால் .........?

மன் : சிறை பற்றிய நம் நாட்டின் சட்டம் என்ன ?

அமை நாட்டுக்காகச் சிறை செய்யப்படுபவரை விருந்தினராகவே மதிக்க வேண்டும். அவர் விரும்பும் உணவு முதலிய வசதிகள் யாவும் செய்து தர வேண்டும்.

ப. த. : மன்னவா ஒரு செய்தி. ஆயுள் தண்டனை பெற்ற கைதி மன்னவரைப் பார்க்கக் கூடாது என்பதும் நம் நாட்டுச் சட்டம்.

அமை : ஆயுள் கைதியை மன்னர் பார்க்கக் கூடாது என்பது நம் குல தெய்வத்தின் ஆணை.

ப. த. : டேய் தோலா ! வில்லப்பனின் தலையைத் துணியால் மூடு. அரசர் அவர் முகத்தைப் பார்க்கக் கூடாது.

மன் : யாரங்கே?

[கை தட்டுகிறார். சிறை அதிகாரி குள்ளப்பன் வருகிறான்.]

குள்ளப்பன் : மன்னாதி மன்னரே! வணக்கம்.

அமை : குள்ளப்பா இவர் ஆயுள் தண்டனை பெற்ற கைதி. நம் நாட்டுச் சட்டப்படி அவர் விரும்பும் உணவு, உடை, பிற வசதிகள் செய்து தருக! இது அரசர் ஆணை.

குள் : அரசே!......

அமை : ம்...... உடனே சிறைக்கு அழைத்துச் செல்க

[வில்லப்பனை அழைத்துச் செல்கிறார்கள்]

மன் : அமைச்சரே! நன்றாகச் சொன்னீர். நல்ல சட்டங்களைச் சரியான நேரத்தில் எடுத்துக் கூறினீர் ......

ப. த. : ஆமாம் ...... விரும்பிய வசதிகள் செய்யச் சொல்லியிருக்கிறோமே ... பணச் செலவு ?

மன் : ஆம்! ஆம்! மறந்தோமே, பண்டாரப் பணத்தில் கை வைக்கக் கூடாது.

அமை : என்ன தின்றுவிடப் போகிறான்? அதைத் தான் பார்ப்போமே.

(—திரை விழுகிறது—)

## ஆருவது காட்சி

இடம்: சிறைக் கொட்டடி:

நேரம் : மாலை.

கதையுற்றோர் : குள்ளப்பன், வில்லப்பன்.

குள்ளப்பன் : வில்லப்பரே! இதுதான் சிறை பார்த்தீரா எவ்வளவு வசதியாக இருக்கிறது.

வில்லப்பன் : என்னய்யா வசதி இருக்கிறது? தரை குண்டுங் குழியுமாயிருக்கிறது, மேல் கூரை எழுவதும் விழுவதுமாய் இருக்கிறது.

குள் : அப்படியா? இந்த ஊர் வீடுகளை நீர் அறியாதவர்போல் பேசுகிறீரே அது கிடக்கட்டும். உமக்கு வேண்டிய உணவுகளைச் சொல்லலாம்.

வில் : நல்லது. சிறை உணவு பற்றி உன் நாட்டுச் சட்டம் என்ன சொல்கிறது?

குள் : சிறைக் கைதி எந்த வகை உணவு கேட்டாலும் கொடுக்க வேண்டும் என்பதே சட்டம்.

வில் ; அது இருக்கட்டும். உங்கள் சட்டத்தைப் பற்றிச் சிறிதளவு விளக்கமாகச் சொல்லும்.

குள் : என்ன? கேட்கலாம்

வில் : சட்டங்கள் சிந்தித்து உருவாக்கப்பட்டவையா? அல்லது அவ்வப்போது தயாரித்துக் கொள்பவையா?

குள் : அது எப்படியுமிருக்கலாம். ஆனால் சில அடிப் படைச் சட்டங்கள் எங்கள் குல தெய்வத்தால் அரு ளப்பட்டவை. அவைகளிலிருந்து ஒரு போதும் தவற மாட்டோம்.

வில் : அப்படியா! இந்தச் சிறைச் சட்டம் குல தெய் வம் அருளிய சட்டமா? அல்லது திடீர் ஏற்பாடா?

குள் : இது குல தெய்வம் அருளிய சட்டம்.

வில் : அப்படியானால் இதைத் தவறாமல் கடைப் பிடிப் பீர்கள். அல்லவா?

குள் : ஆம். உமது காலை உணவு பற்றிக் கூறும்.

வில் : சாப்பாடு கிடக்கட்டும், காலைச் சாப்பாட்டிற்கு! இப்பொழுது என்ன அவசரம்' நான் ... விடியற் காலை மூன்று மணிக்கு விழித்து விடுவேன். எழுந்த வுடன் எனக்கு ஒன்றும் பெரும் சாப்பாடு வேண்டிய தில்லை ......

குள் : பின் என்ன வேண்டும்?

வில் : ஒரு சேர் ஆட்டுப் பால் வேண்டும்.

குள் : என்ன? ஆட்டுப் பாலா!!

வில் : ஆம். ஆட்டின் தனிப் பால் கிடைக்கும் அல்லவா?

குள் : கிடைப்பதென்பது ......

வில் : அப்படியானால் உங்கள் குல தெய்வம் அருளிய சட்டம் ... என்ன ஆவது?

குள் : சரி. எப்படியும் ஏற்பாடு செய்வோம் பிறகு.

வில் : முதல் நாள் இரவு ஊற வைத்து உரித்து எடுத்த வாதம் பருப்பு வேண்டும்.

குள் : வாதம் பருப்பா! ம் ... எவ்வளவு வேண்டும்?

வில் : அதிகம் வேண்டாம். ஒரு அரைச் சேர் போதும். அதோடு முந்திரி கால் சேர், காய்ந்த திராட்சை கால் சேர் இவை போதும். மறந்து விடப் போகிறீர். குறித்துக் கொள்ளும்.

குள் : ஆம். எனக்கு மறதி அதிகம்தான். எதற்கும் குறித்துக் கொள்கிறேன் [எழுதிக் கொண்டே] ஆட்டுப் பால் ஒரு சேர், பாதம் அரைச் சேர், முந்திரி கால் சேர், திராட்சை கால் சேர்.

வில் : சரியாக ஆறரை மணிக்குக் குளிக்க வெந்நீர் வேண்டும். ஏழரை மணிக்கு ...

குள் : காலைச் சாப்பாடுதானே ?

வில் : சாப்பாடு ஒன்றும் வேண்டாம். சிற்றுண்டியே போதுமானது.

குள் : என்ன வேண்டும் ?

வில் : குறித்துக் கொள்ளும்.

குள் : சரி. குறித்துக் கொள்கிறேன். அப்பம் எத்தனை வேண்டும் ?

வில் : அப்பம் இருக்கட்டும். முதலில் இனிப்புத்தான் வேண்டும். அரைச் சேர் கோதுமை அல்வா, இரண்டு பலம் தேங்காய் பருப்பி.

குள் : [எழுதிக் கொண்டே] கோதுமை அல்வா அரைச் சேர், தேங்காய் பர்பி 2 பலம், அப்பம் ... 5 எழுதட்டுமா ?

வில் : ஐந்து வேண்டாம். இரண்டு.

குள் : சரி. அப்பம் இரண்டு. அதற்குத் தொட்டுக் கொள்ள.

வில் : ஒரு கால் சேர் வெண்ணெய்.

**குள் :** என்ன? வெண்ணெயா வேண்டும்? உம்... சரி. வெண்ணெய் கால் சேர்.

**வில் :** குள்ளப்பரே! வெண்ணெய் பசுவின் வெண்ணெயாகவும், புதியதாகவும் இருக்க வேண்டும்.

**குள் :** இங்கு பசுவின் வெண்ணெய் கிடைக்காதே!

**வில் :** என்ன கிடைக்காதா? உமது நாட்டின் சட்டம் என்ன சொல்கிறது என்பதை மறந்தீரோ?

**குள் :** உம், சரி. சொல்லும். அடுத்துப் பருகுவதற்கு என்ன வேண்டும்?

**வில் :** பருக இருக்கட்டும். தின்ன வேண்டியவற்றை எழுதிக் கொள்ளும். இடியப்பம் ஒன்று; வெண் பொங்கல் இரண்டு உருண்டை; உளுந்து வடை நெய்யில் பொறித்தது ஒன்று; வாதுமை நெய் பொரிப்பு ஒரு பலம்; நெய் தோசை ஒன்று; பூரி பாதி, கிழங்குடன்; நல்ல வெண்ணெய் ரொட்டி இரண்டு; உப்பு ரொட்டி ஒன்று; மலைப் பழம் இரண்டு ...... அடடே மறந்து போனேனே ...... மூன்று வகை குல்கந்து ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு கரண்டி.

**குள் :** உம். ம், ...... அவ்வளவுதானே?

**வில் :** தின்ன வேண்டியது அவ்வளவுதான். பிறகு பசும் பாலில் தயாரிக்கப்பட்ட பாதம்கீர் இரண்டு சேர்.

**குள் :** சரி, நண்பகல் சாப்பாட்டிற்கு என்ன வேண்டும்?

**வில் :** மிக அவசரப்படுகிறீரே. அதற்குள் நண்பகல் சாப்பாட்டிற்கு என்ன அவசரம். சரியாகப் பத்தரை மணிக்குச் சாத்துக்குடி ஆரஞ்சு ஒன்று ஆப்பிள் ஒன்று ஆஸ்திரேலியா திராட்சை அரைச்சேர்,

வெள்ளை இளநீர் கையால் வழித்தெடுக்கும் பக்கு வத்தில் இரண்டு.

குள் : இவைகளெல்லாம் ஒத்து வருமா ?

வில் : குலதெய்வம் கூறிய சட்டம் ஒத்து வருமா ?

குள் : சரி பார்ப்போம்.

வில் : குள்ளப்பரே ! பார்ப்போம் என்ற மழுப்பல் பதிலெல்லாம் அந்த அமைச்சரோடு இருக்கட்டும். சிறைக் கைதி விரும்புகிற உணவை அப்படியே தயாரித்துத் தர வேண்டும் என்பது குல தெய்வம் அருளிய உம் நாட்டுச் சட்டம். நினைவிருக்கட்டும். நண்பகல் உணவின் பட்டியல் சொல்கிறேன். குறித்துக் கொள்ளும். ஒரு வறுவல். ஒரு பொறி யல். ஒரு அவியல். ஒரு துவையல். ஒரு துவட் டல், ஒரு சிவட்டல், உப்பேறி, இனிப்பேறி பச்சடி பக்கத்தில் கிச்சடி, பேரீச்சம்பழக் குல்கந்து, தக்காளிக் கூட்டு, ஊறுகாய், கடாரங்காய் மிளகாய் ஊறல், அப்பளம் ஒன்று, பப்படம் ஒன்று. ஆக 16 கறிகள். உழுந்து வடை 2, மூன்று வகைப் பழம், மா, பலா, வாழை. ஒரு மோர்க் குழம்பு, பாகற் காய் பிட்லே, முருங்கைக் காய்ச் சாறு ; இது சோற்றில் போட்டுச் சாப்பிட ; தனியே பருகு வதற்குப் பலாச்சுளைச் சாறு ; ஆடை எடுக்காத உறைந்த தயிர்.

குள் ; அப்பாடா. நண்பகல் சாப்பாடு முடிந்ததா ?

வில் ; என்ன மனிதரையா நீர். முறையாகச் சாப்பிடக் கூடத் தெரியாது போலிருக்கிறதே! அதனால் தான் பிடித்து வைத்த பிள்ளையார் போல் இருக் கிறீர். பெயரும் சரியாகத்தான் குள்ளப்பர் என்று வைத்துள்ளார்கள். பஃருப்பில்லாமல் விருந்

துண்டா? இனிப்பு வகைகள் இலையில் போட வேண்டியவை ஐந்து- வெள்ளை யப்பம் ஒன்று; இனிப்பு அப்பம் ஒன்று; சவ்வரிசி சேமியா கலந்து பசும் பாலிலும் தேங்காய்ப் பாலிலும் தயார் செய்த பாயசம்.

குள்: பாயசமா? இதெல்லாம் நீர் ஒருவரே சாப்பிடப் போகிறீரா?

வில்: இல்லை. உங்கள் குல தெய்வத்தையும் சேர்த்துக் கொண்டுதான் சாப்பிடப் போகிறேன். நல்ல ஆளையா! அவ்வளவையும் நான்தான் சாப்பிட்டுத் தொலையப் போகிறேன். மீதி இருந்தால் உமக்கு இல்லாமல் வேறு யாருக்கு?

குள்: என்ன கொடுமை. எங்கள் மன்னர் கூட இப்படிச் சாப்பிடுவதில்லையே!

வில்: உங்கள் மன்னரை ஒரு முறை கைதியாக வரச் சொல், விரும்புவதைச் சாப்பிட்டுப் பார்க்கலாம்.

குள்: சரி. சரி. இரவுச் சாப்பாட்டைச் சொல்லும்.

வில்: ஏனய்யா. பறக்கிறீர்? பகல் சாப்பாடே இன்னும் முடியவில்லை. வாழைப்பூக் கோலா உருண்டை; வெண்டைக்காய் வறுவல் வேண்டும். சரி சாப்பாடு இத்தோடு .........

குள்: அப்படியானல் இரவுச் சாப்பாட்டைச் சொல்லும்.

வில்: ஐயா! உமக்கு ஏதாவது அவசர வேலை இருந்தால் போய் வாரும். மாலைச் சிற்றுண்டி முடியவில்லை. அதற்குள் இரவுச் சாப்பாட்டிற்குப் போய் விட்டீரே.

குள்: சரி சொல்லும்.

வில்: இரண்டு இனிப்பு; ஆறு வகைப் பழச் சாறு; ஒரு கார சோமாசா நெய்யிலே பொரித்தது;

வெண்ணெய் ரொட்டி நான்கு; முந்திரி வறுவல் அரைப் பலம்; வாதாம் வறுவல் அரைப் பலம்; குளிர வைத்த அன்னாசி, பப்பாளிப் பழங்கள், தனிப் பசும் பால் கால் படி.

குள் : உம் ... பிறகு.

வில் : பிறகு இரவு உணவுதான். குறித்துக் கொள்ளும்: கறி வகை 8, பருப்பு சாம்பார், வற்றல் குழம்பு, மிளகுச் சாறு, முப்பழம், பால் அவ்வளவுதான் போதும்.

குள் : போதுமா? போதுமென்ற சொல்லை இப்போது தான் கேட்கிறேன்.

வில் : அடடே! மறந்தே போனேன். இரவுப் படுக்கைக்குப் போகும்போது ஆப்பிள் ஒன்று; சீமை இலுப்பை இரண்டு; பசும் பால் ஒரு படியைக் கால் படியாகச் சுண்டக் காய்ச்சியதும் சீனிக் கற்கண்டு குங்குமப்பூ சேர்த்ததுமாக வேண்டும்.

குள் : அப்பா! சாப்பாடு முடிந்ததா?

வில் : இரும் ஐயா! இவை திங்கட்கிழமைக்கு உரியவை. செவ்வாய்க் கிழமை இறைச்சி உணவும் மீனும் வேண்டும். காலையில் ஆட்டுக் கால் சாறு. புதன்கிழமை கட்டுச் சோறுகள்; வியாழக்கிழமையில் பழைய திங்கட்கிழமைப் பட்டியல். வெள்ளிக் கிழமையில் இறைச்சிப் பட்டியல். சனிக்கிழமையில் புதன்கிழமைப் பட்டியல். ஞாயிற்றுக்கிழமை எனக்கு உண்ணா நோன்பு.

குள் : ஆ ... ஆ ... என்ன?

வில் : அன்று நான் வெந்த உணவு தின்ன மாட்டேன். காலையில் ஆட்டுப் பால், மணிலாக் கடலை,

முளைக்க வைத்த வாதம் பருப்பு, முந்திரிப் பருப்பு. 11 மணிக்கு ஐந்து பழ வகை. மூன்று குளிர் நீர் வகை. நண்பகல் சாப்பாடு வெறும் பழ வகையுடன் தயிரும். மாலையில் உண்மையாகவே உண்ணு நோன்பு. ஒன்றுமே சாப்பிடுவதில்லை. இரவில் ஆப்பிள் மூன்று. திராட்சை ஒரு சேர், காய்ச்சாத பால் அரைப்படி.

குள் : அப்பா!

வில் : போதும் ஐயா! உங்கள் அரசாங்கத்திற்கு அதிகச் செலவு தரக்கூடாது. ஆனல் சமையல் சரியான பக்குவத்தில் இருக்க வேண்டும்.

குள் : அவ்வளவுதானே? அப்பாடா.

(—திரை விழுகிறது—)

## ஏழாவது காட்சி

இடம் : அரசவை.

நேரம் : காலை.

கதையுற்றோர் : மன்னர், அமைச்சர், படைத் தலைவர் குள்ளப்பன்.

(குள்ளப்பன் வருகிறான்)

குள்ளப்பன்: மன்னாதி மன்னரே! சிறை யதிகாரி குள்ளப்பன் வந்திருக்கிறேன்.

மன்னர் : என்ன செய்தி? அந்த வில்லப்பன் எப்படி இருக்கிறான்?

குள் : அவரைப் பற்றித்தான் சொல்ல வந்தேன் மன்னவா!

ப. த. : ஏன் குறையின்றி மன நிறைவோடு இருக்கிறான் அல்லவா?

குள் : அதுதான் இல்லை.

அமை : ஏன் குள்ளப்பா. நீ தவறாக நடந்து கொண்டாயோ?

மன் : வேண்டிய வசதிகள் யாவும் செய்து கொடுப்பது தானே.

குள் : மன்னவா! எவ்வளவு வசதி செய்தும் அவன் மனம் நிறைவு அடையவில்லை. குறைபட்டுக்

கொள்கிறான்! ஆனால் பணச் செலவு அளவுக்கு மீறிப் போகிறது.

மன் : என்ன? பணச் செலவு

அமை : அப்படி என்ன அதிகமாகி விட்டது. சொல் லேன்.

குள் : இன்றுவரை அவனுக்காக 450 பணம் செலவாகி இருக்கிறது. அவனை நாம் ஆயுள் வரை சிறை வைப்பதற்குள் பண்டாரப் பணம் முழுவதும் போய் விடும். மேலும் 10000 பணம் தேவைப்படும்.

ப. த. : என்ன! அப்படி என்ன செலவு?

அமை : என்ன குள்ளப்பா! விளையாடுகிறாயா? 10 நாட்களுக்கு 450 பணமா? எப்படிச் செலவா யிற்று?

குள் : அமைச்சரே! அவர் உணவுப் பட்டியலை நான் படித்தால் நேரமாகும். அலுத்துப் போவீர்கள். இதோ இருக்கிறது அந்த 18 பக்கம் உள்ள பட்டியல்.

அமை : கொடு இங்கே. பட்டியலே 18 பக்கமா? (பட் டியலைப் படித்த பிறகு) அடடே! நம் மன்னர்கூட இவ்வாறு உண்பதில்லையே?

மன் : அமைச்சரே! அப்படி என்ன சாப்பிடுகிறான்?

அமை : நீங்களே பாருங்கள் அரசே!

மன் : (பார்த்த பிறகு) ஐயோ! பண்டாரம் என்னாவது? நாடு என்ன ஆவது? நாம் என்ன ஆவது? இப் படிச் செலவு செய்ய முடியாது என்று சொல்லிவிடு.

குள் : மன்னர் பெருமானே! நம் நாட்டுச் சட்டம் என்ன ஆவது?

மன் : நம் நாட்டுப் பண்டாரம் என்ன ஆவது?

ப. த. : சட்டம் கிடக்கட்டும். சட்டம்.

அமை : அப்படி இல்லை. மன்னவா! இது நமது குல தெய்வத்தின் ஆணையால் ஏற்பட்ட சட்டம்.

மன் : ஆமாம். அச்சட்டத்தை மீறக் கூடாது, குல தெய்வம் சினங்கொள்ளும்.

ப. த. : பண்டாரப் பணத்தை குறைக்கக் கூடாது என்பதும் குல தெய்வத்தின் ஆணை தானே.

அமை : ஆம். அதற்கேற்றாற்போல் செய்ய வேண்டும் மன்னவா! நாம் சிறைக் கதவுகளைத் திறந்து வைத்து விடுவோம். அவனாக ஓடிப் போகட்டும். இதுதான் இப்போது செய்யக் கூடியது.

ப. த. : அவனுக்கு விடுதலை கொடுத்து விட்டால் என்ன?

மன் : அப்படிச் செய்தால் என்ன அமைச்சரே!

அமை : கூடாது. முறை என்ன ஆவது? அவன் கொலைக் குற்றம் செய்திருக்கிறான். நாமே தண்டனை கொடுத்திருக்கிறோம். காரண மில்லாமல் பணச் செலவைக் காட்டி விடுதலை தரக் கூடாது.

மன் : அதுவும் சரிதான். குள்ளப்பா! சென்று சிறைக் கதவுகளைத் திறந்து வை. காவல் வேண்டாம் அவனாக ஓடி விடட்டும்.

குள் : தங்கள் ஆணை. அப்படியே செய்கிறேன்.

[குள்ளப்பன் செல்கிறான். வாலப்பன் வருகிறான்]

வாலப்பன் : மன்னாதி மன்னரே! மறையாத வீரரே!

மன் ; என்ன? சொல்!

வா: தங்களைக் காணத் தூதுவர் ஒருவர் வந்துள் ளார்.

மன்: வரச்சொல்.

[வாலப்பன் செல்கிறான். தூதுவன் வருகிறான்]

தூதுவன்: வணங்குகிறேன் மன்னவா!

மன்: எந்த நாட்டுத் தூதன் நீ.

தூது: (முடங்கலைக் கொடுக்க மன்னவன் வாங்கிப் படைத் தலைவனிடம் கொடுக்க, படைத் தலைவன் படிக்கிறான்)

ப. த.: அன்பு கெழுமிய பாலை நாட்டு மன்னர் மாசப்ப ருக்கு வணக்கம். நலம். நலம் விளைக. தங்கள் நாட்டுப் பொருளாதார நிலை பற்றிச் சென்ற ஆண்டு நீங்கள் குறிப்பிட்டது என் நினைவில் இருக் கிறது. அது கருதியும், தங்களைக் கண்டு பேசி மகிழவும் ஒரு சுற்றுலாவாக அடுத்த வாரம் புத னன்று யாம் தங்கள் நாட்டுக்கு வர விரும்புகிறோம். பிற பின். வணக்கம்.

அன்புள்ள,
குறிஞ்சிக்கோமான்
குறிஞ்சி நாட்டு மன்னர்.

மன்: அப்படியா! மிக்க மகிழ்ச்சி, தூதுவரே என் மகிழ்ச்சிக்கு அறிகுறியாக இம் மலரைப் பெறுக. சென்று அறிவிப்பாயாக! உன் மன்னனை எதிர் கொள்ளும் ஆர்வத்துடன் இருக்கிறேன்.

[தூதுவன் செல்கிறான்]

மன்: அமைச்சரே! வரவேற்புக்கு வேண்டிய ஏற் பாடுகளைச் செய்க!

அமை: ஆணை அரசே! செய்கிறேன்.

(—திரை விழுகிறது—)

## எட்டாவது காட்சி

இடம் : தோட்டம்.

நேரம் : காலை.

கதையுற்றோர் : மன்னர், அமைச்சர், குள்ளப்பன்.

[மன்னரும் அமைச்சரும் பேசிக் கொண்டே வருகிறார்கள். குள்ளப்பன் வருகிறான்]

குள் : மன்னாதி மன்னா ! வணக்கம்.

அமை : என்ன செய்தி ? வில்லப்பன் ஓடி விட்டானா ?

குள் : அதுதான் இல்லை ! அவன் கவலையற்று உள்ளான். அவன் போவதாக இல்லை. "என்ன ஐயா துணைக்குக் காவலர்களை வைக்கவில்லை" என்று அதட்டிக் கேட்கிறான். சாப்பாட்டு நேரம் வந்ததும் சமையலறைக்குப் போய் விடுகிறான். உரிய உணவுகள் இல்லையேல் கொட்டம் போடுகிறான். எங்களால் சமாளிக்க முடியவில்லை.

மன் : ஆள் பொல்லாதவன் போல் இருக்கிறதே ! என்ன அமைச்சரே ?

அமை : உம் ......... (கொஞ்சம் சிந்தனை செய்து) சரி, மன்னவரே ! இப்படித்தான் செய்ய வேண்டும். நம் நாட்டுக்கு வேற்று நாட்டு மன்னர் வருகை தரும்

போது அந்த மகிழ்ச்சியின் அறிகுறியாகச் சிறைக் கைதிகளை விடுதலை செய்வது வழக்கம். இப்போது குறிஞ்சிக்கோமான் வருகையை முன்னிட்டு என்று சொல்லி அவனுக்கு விடுதலை வழங்கி விடுவோம்.

மன் : நன்று, அமைச்சரே! நன்று. இதுதான் சரி.

அமை : குள்ளப்பா! போ. அதுவரை அவனைச் சரியாகப் பார்த்துக் கொள். வேண்டியவற்றைக் கொடு. செய்தியை இப்பொழுது கூறுதே. புதன் கிழமை காலை அறிவித்து விடுதலை செய்து விடு.

மன் : ஆம், போ.

குள் : அப்படியே, மன்னவா!

(—திரை விழுகிறது—)

## ஒன்பதாவது காட்சி

இடம்: அரண்மனை.

நேரம்: காலை.

கதையுற்றோர்: மன்னர், அமைச்சர், படைத்தலைவர் குறிஞ்சிக்கோமான், வாலப்பன், வில்லப்பன்

[மன்னர் குறிஞ்சிக்கோமானை எதிர்கொண்டழைத்துப் பேசிக்கொண்டே வருகிறார்.]

மன்னர்: மிக்க மகிழ்ச்சி; மிக்க மகிழ்ச்சி.

குறிஞ்சிக்கோமான்: நாம் சந்தித்து அதிக நாட்கள் ஆகிவிட்டன அன்றோ?

மன்: ஆம். இரண்டாண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. உங்களது வருகை குறித்த மகிழ்ச்சியின் அறிகுறியாக இன்று சிறைக் கைதிகளை விடுதலை செய்துள்ளோம்.

ப. த.: மக்கள் யாவரும் மகிழ்ச்சியாக உள்ளார்கள். அரண்மனையே பூரிப்பாக விளங்குகிறது.

மன்: நம் மனமும் மிகவும் குளிர்ந்துள்ளது.

[வில்லப்பன் ஓடி வருகின்றான்]

வில்: வயிறு எரிகிறது; எரிகிறது.

மன்: என்ன அங்கே இரைச்சல்?

வில்: இரைச்சல் மட்டுமில்லை: எரிச்சலுங்கூட.

ப.த.: யாரவன்?

வில்: நான்தான் வில்லப்பன்.

ப.த.: உனக்குத்தான் விடுதலை வழங்கினோமே?

வில்: யாரைக் கேட்டுக்கொண்டு வழங்கினீர்கள்?

அமை: அடா! வில்லப்பா! குறிஞ்சி நாட்டுக் கோமகனார் வருகை தந்துள்ளார்கள். அவர்கள் வருகையின் அறிகுறியாக நீ விடுதலை செய்யப்பட்டிருக்கிறாய்.

வில்: வேற்று நாட்டு மன்னர் பெருந்தகை வந்திருப்பது தெரிந்துதான் நானும் வந்திருக்கிறேன். பெருமை தங்கிய குறிஞ்சிக் கோமகனாரே! கேளுங்கள் இந்தக் கொடுமையை. நாட்டில் புகுந்துவிட்ட துப்பாக்கி வீரன் ஒருவனைக் கொன்றோ, பிடித்தோ துப்பாக்கியுடன் வந்தால் 2000 பணம் பரிசு தருவதாகப் பறை யறைந்து அறிவித்தார்கள். நான் அவனைக் கொன்றேன். துப்பாக்கியைக் கொணர்ந்தேன். பரிசு கேட்டேன். கொலைக் குற்றம் சாட்டினார்கள். ஆயுள் தண்டனை என்ற பரிசை வழங்கினார்கள். இத்துணை நாளாகச் சிறையில் இருக்கிறேன். நாட்டாருக் கெல்லாம் கொலைகாரன் என்று அறிமுகப் படுத்தப்பட்டுள்ளேன். இப்போது விடுதலை என்கிறார்கள். விடுதலையாகி வெளியே போய் நான் எவ்வாறு நாட்டு மக்கள் இடையே மதிப்பாக வாழ முடியும்? நான் நாணயமான வணிகன். கொலையாளியாகவே நாட்டில் உலவ முடியாது.

கு. கோ.: என்னப்பா! அதற்காக நீ என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?

வில்: விடுதலையை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

ப.த.: பின் என்ன செய்யச் சொல்லுகிறாய்?

வில்: விதித்த தீர்ப்புப்படி ஆயுள் வரை சிறையிலேயே வைத்திருக்க வேண்டும்.

மன்: அது முடியாது. விடுதலை ஆணை பிறப்பித்தாகி விட்டது.

அமை: ஆற்றிய ஆணையை மாற்ற முடியாது.

கு. கோ.: இது என்ன அப்பா புதுமை. விடுதலை வேண்டாம் என்கிறாய். சிறைக்குள்ளே இருக்கவா விரும்புகின்றாய்?

வில்: விரும்பிச் சிறைக்குள் அடைபடும் எண்ணமில்லை. வெளியே போனால் மதிப்போடு வாழ முடியாது என்பதால் சிறைக்குள்ளேயே போடுங்கள் என்கிறேன்.

கு. கோ.: மாசப்பரே அவன் சொல்வதிலும் முறை இருக்கிறது.

ப. த.: அதற்காக என்ன செய்வது?

வில்; என்னை விடுதலை செய்தால் நான் நாட்டை விட்டே ஓடி விட வேண்டும்.

ப. த: ஓடு.

வில்: ஓடினால், ஓடுகிற இடத்தில் வாழ வேண்டாமா?

கு. கோ,: அதற்காக என்ன கேட்கிறாய்? ஏதும் பணம் வேண்டுகிறாயா?

வில்: ஆம்! என் வாழ்வீட்டுப் பணமாக முப்பதினாயிரம் பணம் கிடைக்க வகை செய்ய வேண்டும்.

மன்: என்ன, முப்பதினாயிரமா! குறிஞ்சிக் கோமானே (தாழ்ந்த குரலில்) என் நாட்டுப் பொருளியல் நிலை உங்களுக்குத் தெரிந்தது தானே.

கு. கோ.: தெரியும் அதற்காக அரச மதிப்பை விட்டுக் கொடுக்கக் கூடாது. வேண்டுமானால் நான் உங்க

ளுக்குக் கடஞகத் தருகிறேன். கொடுத்து விரட் டுங்கள் கழுதையை.

மன் : உங்கள் கருத்துப்படியே செய்வோம்.

கு. கோ. : வில்லப்பா! முப்பதிஞயிரம் என்பதெல்லாம் வீண் அவா; நடவாது! உனக்காக இருபதிஞ யிரம் பணம் தர மன்னர் இசைவார். பெற்றுக் கொண்டு தலை காட்டாமல் ஓடிவிட வேண்டும். என்ன இசைவுதானே.

வில் : இசைகிறேன்.

மன் : அதையும் தங்கள் வருகையின் நினைவாகத்தான் ஏற்றுக் கொள்கின்றேன்.

வில் : பெருமை தங்கிய குறிஞ்சி நாட்டுக் கோமகஞரே! பாலை நாட்டு மன்னர் ஆணைப்படி பரிசு பெறுவதற் காகத் துப்பாக்கியைப் பறித்து வந்து கொடுத்தேன். அதற்குரிய பரிசை இப்பொழுது வழங்குமாறும் ஏற் பாடு செய்ய வேண்டும், இன்றேல் துப்பாக்கியை என்னிடம் தந்துவிட ஏற்பாடு செய்ய வேண்டு மாய்ப் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

கு. கோ. : மாசப்பரோ! அந்தத் துப்பாக்கியை அவனி டம் எறிந்து விடுங்கள்.

மன் : குறிஞ்சிக் கோமானே! தங்கள் எண்ணப்படியே செய்வோம். படைத் தலைவரே துப்பாக்கியை இவ னிடம் கொடுத்து விடுக. அமைச்சரே! குறிஞ்சிக் கோமகஞர் அமைச்சர் வாயிலாகப் பணம் சேரச் செய்து ஆளை விரட்டுக.

அமை : அவ்வாறே செய்கிறேன்.

வில் : வணக்கம். நன்றியுடையேன்.

(—திரை விழுகிறது—)

## பத்தாவது காட்சி

இடம் : பாலை நாட்டுக் கடற்கரை.

நேரம் : விடியற்காலை.

கதையுற்றோர் : வில்லப்பன் என்னும் வேலப்பன்.

[வில்லப்பன் தனியே உடைகளை மாற்று கிறான். ஒவ்வொரு ஆடையாகக் கழற்றிப் புரட்டிப் புரட்டி மாற்றுகிறான். காற் சட்டையைப் புரட்டி ஒரு ஓரப் பகுதியாக மடித்து மேற் சட்டை யாக்கினான். இவ்வாறே எல்லாவற்றையும் மாற்றி உடுத்தி முதலில் வந்த வேலப்பனைத் தோற்றமளிக்கிறான். மாற்றிக் கொண்டே பேசுகிறான்.]

**வேலப்பன் :** நல்ல நாடப்பா! நல்ல மன்னர்! நல்ல அரசு! நல்ல பொருளாதாரம். புழுப்புழுத்தது போல மக்கள் கூட்டம். கட்டுப்பாடில்லாது குழந்தைகளைப் பெற்றுப் பெருக்கியுள்ள குடும்பங் கள். ஆயிரம் ஆண்டானாலும் இந்த நாடு முன் னேருது.

என் படகு திசை தவறி இங்கே வந்ததும் போதும். மாட்டிக் கொண்டேன் என்றிருந்தேன். ஆட்டி வைத்து விட்டேன். புற்றீசல்போல மக்கள் இருக்கிறார்கள். கற்றுக்குட்டி போலப் பொருளா

தாரம் இருக்கிறது. இதற்கிடையே குல தெய்வத்தின் மீது நம்பிக்கை. முதலில் நண்பர்களைப் போலப் பேசுகிறார்கள். போகப் போக வஞ்சகத்தை அவிழ்த்து விடுகிறார்கள்; எல்லை மீறி விடுகிறார்கள்.

ஒரு தனி ஆள் நான். வேலப்பனுக வழி தவறி வந்தேன். இந்த உடைகளை மாற்றி அணிந்தே வில்லப்பனுனேன்; நம்பினார்கள். துப்பாக்கி வீரனைப் பிடித்துத் தருவேன் என்றேன்; நம்பினார்கள். பிடித்துக் கொன்றதாகக் கேழ்வரகில் நெய் வடிகிறது என்றேன். கேட்ட மடையர்கள் நம்பினார்கள். 'பரிசு தருவோம்' என்றார்கள். குல தெய்வத்தையும் சட்டத்தையும் மறந்து சிறையில் தள்ளினார்கள். உணவை விழுங்குவதைப் போல் பண்டாரப் பணத்தை விழுங்கினேன்; ஆடிப் போனார்கள். ஆட்டி வைத்தேன். கொம்பில்லாத கொடி போல ஆடினார்கள். வீட்டிற்கோ நாட்டிற்கோ உயிர் நாடி பொருளியல். அது இல்லாத வீடோ நாடோ காடுதான்: காடாக்குவது குழந்தைப் பெருக்கம். அதன் வழி மக்கட் பெருக்கம். இப்பெருக்கம் உடை நாடு பாலை நாடு. பாலை நாடா? பாலைக் காடு. வீட்டைக் காடாக்காமல் அளவோடு குழந்தைகளைப் பெற்று வளமாக வாழ வேண்டும்.

"அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்"

(—திரை விழுகிறது—)

# கலைக்குழல் வெளியீடுகள்

கவிஞர்

## கோவை. இளஞ்சேரன்

எழுதியவை.

| | | |
|---|---|---|
| கோவை. இளஞ்சேரன் கவிதைகள் | கலிக்காக் கட்டு உரு. | 4—00 |
| வள்ளுவர் வாழ்த்து | எளிய கட்டு ,, | 5—00 |
| | கலிக்காக் கட்டு ,, | 6—00 |
| மணியான பேச்சு | ,, | 3—50 |
| அக்கரை வானொலியில் இக்கரை இலக்கியம் | ,, | 2—50 |

விற்பனை உரிமை:

மாரியப்பா ஏசன்சி,

அ. பெ. எண்: 26. தொலை பேசி: 405

நாகப்பட்டினம்.

